



நூற்றாண்டுவிழா மும்மணிகள்





# 47-ஆம் ஆண்டு மலர்

# SHIVAJI ANNUAL NUMBER 1981

விலை ரூ. 4-00




துன்மதி - ஐப்பசி | OCTOBER 1981 | ஆண்டு: 46

## மலரினுள்ளே...

நாரண துரைக்கண்ணன்

தி. சா. ராஜு.

புத்தனேரி. ரா வேங்கடாசலம்

பரதேசி

ராதிகா

கவியோகி சுத்தானந்த பாரதியார்

திருச்சி பாரதன்

அ. வெ சுப்பிரமணியன்

டி. ஏ. கிருஷ்ணமூர்த்தி

ஏ ஆர். ராஜாமணி

தஞ்சை ஆத்மநாதன்

ப. தனுஷ்கோடி

பட்டுக்கோட்டை என் வி கே. சாமி

ஜி. சி. பட்டாபிராமன்

Prof. K. G. Seshadri

K. V. Janakiraman

இராசி

இளங்கம்பன்

T. R. Kuppusamy

T. N. R.

C. S. கமலபதி

ஜானகி மைந்தன்

திருச்சி இரா. கண்ணபிரான்

M. S. மகேந்திரன்

திருவாழத்தான்

கவிஞர் சக்திதாசன்

ஆசிரியர்: டி. என். இராமச்சந்திரன், B. Com., B. L.

த. பெ. எண். 307

அலுவலகம்: 2-B, கோட்டை ஸ்டேஷன் ரோடு, திருச்சிராப்பள்ளி-620 002.

தொலைபேசி: 27869

# INDEX TO ADVERTISERS




"செயறிர்ந்த செம்பொருளின் நாட்டம் மிக்குச்
செய்கின்ற வேள்வியிந்தச் சிறிய வாழ்வு"

# அருள் வேட்டல்

## எங்கள் இருதய கமல வாசரே



அருளுக.

— ஆசிரியர்.

# பாரதி பாருக்கே  பொதுவுடைமை

நாரண — துரைக்கண்ணன்

" ஆடுவோமே! பள்ளுப்பாடுவோமே!
ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம் என்று
ஆடுவோமே! பள்ளுப்பாடுவோமே!"

நம் பாரத தேசத்துக்குச் சுதந்திரங் கிடைக்குமென்று கனவுகூடக்காணுத காலத்தில்—அதாவது அன்னியர் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டுச் சுயாட்சிச் சுதந்திரங் கிடைப்பதற்கு 30 ஆண்டுகளுக்கு முன்பே, மகாகவி பாரதி தீர்க்க தரிசனமாக, 'ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று ஆடுவோமே! பள்ளுப்பாடுவோமே!', என்று பாடி மகிழ்ந்தார்.

அப்படிப்பட்ட பாரதியாரின் பாடல்களுக்குச் சுதந்திர பாரதத்தில் கூடச் சுதந்திரங் கிடைக்கவில்லை என்ருல் அது வியப்புக்குரியதல்லவா!

ஆம்; பாரதியார் பாடல்களுக்கு 1947-ம் ஆண்டில் நம் நாடு ஆட்சிச் சுதந்திரம் பெற்ற பின்னும் சுதந்திரங் கிடைக்கவில்லை.

சுதந்திர வேட்கை கொண்ட பாரதியார் பிரிட்டிஷ் ஆட்சியின் அடக்கு முறைக்கு மற்ற தேசத் தலைவர்களைப் போலவே ஆளாயிருந்தது தேச பக்தர்களுக்குத் தெரியும். அது போன்றே, பாரதியார் பாடிய பாடல்களும் - முக்கியமாகத் தேசிய பாடல்களும் அடக்குமுறைத் தடையுத்தரவுக்கு இலக்காயிருந்தன.

தேசமக்களைச் சுதந்திர தாகங்கொண்டு வீராவேசமாக எழச்செய்வதற்குத் தேசத்தலைவர்கள் புரிந்து வந்த வீரமுழக்கங்களுடன், பாரதியார் பாடியுள்ள தேசியப பாடல்களும் மூலகாரணமாக இருந்தன.

இதையுணர்ந்த அன்னிய அரசாங்கம், பாரதி பாடல்களைப் பொது மேடைகளிலும் நாடக அரங்கங்களிலும் எங்கும் எவரும் பாடக்கூடாது; பள்ளிப்பாடப்புத்தகங்களிலும் பிற நூல்களிலும் பாரதி பாடல்களைச் சேர்த்து வெளியிடக்கூடாது என்று தடை விதித்திருந்தது.

ஆனுல், தீவிர தேச பக்தர்கள் அத்தடையுத்தரவை மீறிப் பொதுக் கூட்டங்களிலும் ஊர்வலங்களிலும் நாடகங்களிலும் பாடிச் சிறை சென்றனர்; அபராதம் செலுத்தினர் பலர்.

பிரிட்டிஷ் சர்க்கார் நம் நாட்டின் அரசுரிமையை நம்தேசத்தலைவர்கள் வசம் ஒப்படைத்து விட்டுப் போனபின்னர் அவர்கள் பாரதி பாடல்கள் மீது விதித்திருந்த தடையுத்தரவு இயற்கையாகவே மறைந்து ஒழிந்தது. ஆகவே, தேசத்துக்கு விடுதலை கிடைத்தபோதே பாரதி பாடல்களுக்கும் விடுதலை கிடைத்து விட்டது என்பதில் ஐயமில்லை.

ஆனுலும், மற்ருெரு பந்தம் பாரதிப் பாடல்களைக் கட்டுப்படுத்தியிருந்தது. பாரதிப் பாடல்களின் புத்தக வெளியீட்டு உரிமையை, தக்ஷிண பாரத இந்தி பிரசார சபையைச் சார்ந்த பாரதி பிரசுராலயமும் பாரதி பாடல்களின் ஒலிப்பதிவு உரிமையை, சரஸ்வதி ஸ்டோர்ஸாரும் தங்கள் தனியுடைமையாக வாங்கி வைத்திருந்தனர்; ஆதலால், சுதந்திர பாரதத்திலும் பாரதி பாடல்களுக்குப் பரிபூரண சுதந்திரங் கிடைக்கவில்லை.

பாரதி பாடல்களைத் தனி நூல்களாக மட்டுமல்லாமல் பள்ளிப் பாடப் புத்தகங்களிலும் பிற புத்தகங்களிலும் மேற்கோளாக எடுத்துச் சேர்த்துக் கொள்வதற்குக்கூட, மேற்படி பாரதி

பிரசுராலயத்தாரிடம் அவர் கேட்கும் பணத்தைத் தந்து உரிமை பெறவேண்டும்; அது போலவே, நாடகங்களிலும் சினிமாவிலும் இசைத்தட்டிலும் பாட வேண்டுமானுல், சரசுவதி ஸ்டோர்ஸாரிடம் அனுமதி வாங்கவேண்டும்.

இவ்விதமாக சுதந்திர பாரதத்தின் பொதுச் சொத்தான பாரதியாரின் பாடல்கள் பொதுமக்கள் தங்கள் விருப்பம்போல் பயன்படுத்திக்கொள்வதற்கில்லாமல் சிறைப்பட்டுக் கிடக்கும் அவலநிலைக் கண்டு நான் உள்ளங்குமுறிக் கொண்டிருந்தேன். நான் மட்டுமல்ல; என்னைப்போலப் பாரதியன்பர்கள் - தேச பக்தர்கள் பலர் ஆத்திரங் கொண்டிருந்தனர்

எங்கள் இதயக்குமுறல் பாரதி பிறந்த ஊரான எட்டையபுரத்தில் அவருக்கு ஞாபகச் சின்னமாகக் கட்டப்பட்டிருந்த பாரதி மணிமண்டபத் திறப்புவிழாவின்போது எதிரொலிக்கலாயிற்று.

'பாரதி பாடல்கள் தனிப்பட்ட சிலரிடம் தனியுடைமையாகச் சிறைப்பட்டிருப்பது அநீதி; பாரதி பாடல்கள் பொதுவுடைமையாக்கப்பட வேண்டும்' என்றுமக்கள் மன்றத்தில் அதுவும் பாரதிக்கு நினைவுச்சின்னம் எழுப்பும் பெருவிழாவில் எங்கள் சார்பில் முதன்முதலாகத் துணிந்து பெருமுழக்கஞ் செய்தவர் அமரர் ப. ஜீவானந்தம் அவர்கள் ஆவார்; அவரது முதல் முழக்கமே பாரதி பாடல்கள் பொதுவுடைமையாவதற்கு வழி கோலியது என்று நன்றியுடன் இங்கு குறிப்பிட வேண்டும்.

1948 ம் ஆண்டில் ஒரு நாள் தினசரிப் பத்திரிகைகளில் ஒரு செய்தி வெளி வந்தது. அதாவது சென்னை சரசுவதி ஸ்டோர்ஸார் கோவை சென்டிரல் ஸ்டுடியோவில் ஷண்முகா பிலிம்ஸார் தயாரித்து வரும் "பில்ஹணன்" என்ற படத்தில் கதாநாயகி 'தூண்டில் புழுவினைப் போல் என்ற பாரதி பாடலைப்பாடி ரிகார்டு செய்திருப்பதைத்' தடை செய்து வக்கீல் நோட்டீஸ் தந்திருக்கின்றனர் என்ற செய்தி கண்டு என் மனம் மிகவும் வேதனையடைந்தது.

ஜீவானந்தமும் அவரை அடுத்து ம.பொ.சி. யும் பாரதி பாடல்கள் பொதுவுடைமையாக வேண்டும் என்று பாரதி குடும்பத்தினரும் பாரதிப் பிரசுராலயப் பிரமுகர்களும் சரசுவதி ஸ்டோர்ஸ் அதிபர் ஏ. வி. மெய்யப்பரும் வந்திருந்ததைக் கண்டு இவர்கள் அனைவருடையமுன்னிலையிலும் பாரதி பாடல்கள் எல்லாரும் எளிதாக உபயோகப்படத்தக்க நல்ல சூழ்நிலை ஏற்படவேண்டுமென்று வேண்டிக்கொள்ள முயன்றது அன்று இரவு ஜீவானந்தம், ம பொ. சி, தூரன், நான் மற்றும் பாரதியன்பர் சிலர்பாரதி மணிமண்டபத்திலேயே ஒன்று கூடி இது குறித்து ஆலோசனை நடத்தியது தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் இக் கோரிக்கையை மறுநாள் பாரதி மணிமண்டப விழாவில் கூடும் பிரமுகர்கள் முன்னிலையில் தெரிவிப்பது என்று முடிவு செய்தது. ஆனுல், விழா நிர்வாகிகள் எங்களுடைய இந்நன் முயற்சிக்கு இடந்தராமல் தடுத்தது. பின், நான் எனது 'பிரசண்ட விகடனில்', பாரதியைப் பொதுவுடைமையாக்குக,! என்று தலைப்பிட்டு ஒரு கட்டுரை எழுதிக் கிளர்ச்சிக்கு வித்திட்டது போன்ற பல நிகழ்ச்சிகள் என் நினைவுக்கு வந்தன.

இது பற்றிய சிந்தனையிலேயே என் மனம் சுழன்று கொண்டிருக்கையில் கோயம்புத்தூரிலிருந்து சகோதரர் டி. கே. ஷண்முகம் சரசுவதி ஸ்டோர்ஸார் வழக்கு தொடுத்திருக்கும் செய்தியைத் தெரிவித்து இந்த அநீதிக்கு ஏதாயினும் மாற்றுக் கண்டாகவேண்டும் என்று கடிதமே எழுதி உதவிகோரியிருந்தார்.

அதேசமயம் பெருங் கவிஞர் திருலோக சீதாராமும் பிரபல எழுத்தாளர் வல்லிக்கண்ணனும் என்னைப்பார்க்க வந்தனர். அவர்களிடம் பாரதி பாடல் விவகாரத்தை ஆற்ருமையுடன் சொன்னேன் அந்த நண்பர்களும் நாம் இதற்கு ஏதாயினும் செய்தாக வேண்டும் என்று கூறினர்.

பாரதி பாடல்களுக்கு அன்னிய ஆட்சியில் கடுமையாகத் தடையிருந்த காலத்திலேயே, அத்தடையை மீறிப் பொது மக்களிடையேபாரதி பாடல்களைப் பரப்பியவர்கள் சுப்பிரமணிய சிவா, அவருடைய சீடர்களான மதுரை சுந்தரவரதன், டி. சதாசிவம், சங்கு சுப்பிரமணியம் போன்ருர். இவர்களுடைய பெரும் பணியைத் தொடர்ந்து புரிந்தவர் திருலோக சீதாராம் என்பது பாரதியன்பர்களுக்கு நன்கு தெரியும்.

நண்பர் சீதாராம் விழுப்புரத்தில் இருந்த போது தியாகி இராம சடகோபனுடன் சேர்ந்து பாரதி பாடல்களை மக்களிடையே பரப்புவதையே தலையாய பணியாகக் கொண்டிருந்தார். அக்காலத்தில் தென்னாற்காடு மாவட்டம் முழுதும் சுற்றுப்பயணஞ்செய்து பாரதி பாடல்களைப் பாடி மக்களுக்குத் தேச பக்தியூட்டியதை எளிதில் மறக்க முடியாது

அதற்குப்பின், திருச்சி மாவட்ட வாசியான பிறகும் எங்கு சென்றாலும் பாரதி பாடல்களைப் பாடித் தாமும் பரவசமடைந்து கேட்பாரையும் பரவசமடையச் செய்து வந்தார். அவருடைய பேச்சு மூச்சு எல்லாமே பாரதி பாடல்களாக இருக்கும்; பாரதி பெருமையை வெளிப்படுத்துவதாக இருக்கும்.

அப்பேர்பட்டவர் நண்பர் வல்லிக்கண்ணனுடன் வந்து தக்க சமயத்தில் கைகொடுத்து, நான் நீண்ட நாளாகக் கொண்டிருந்த குறிக்கோள் கைகூடுவதற்கு நல்ல அறிகுறியாகத் தென்பட்டது.



அன்று மாலையே நாங்கள் மூவரும் மற்றும் சில பாரதியன்பர்களும் சென்னை மெரீனா கடற்கரையில் திலகர் கட்டத்தில் கூடி, பாரதி பாடல்களுக்கு இருந்து வரும் தடையை அடியோடி நீக்கத்திட்டம் வகுத்தோம் அதன் பயனாகப் பிறந்ததுதான் 'பாரதி விடுதலைக் கழகம்' ஆகும்.

இக் கழகத்துக்கு,எழுத்தாளர் முதல்வர் என நாங்கள் மதித்திருந்த வ. ரா. அவர்களைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தோம். பாரதி புகழ் பாடுவதையே தம் வாழ்க்கை லட்சியமாகக் கொண்டிருந்தவரல்லவா அவர்.

திருலோக சீதாராம், வல்லிக்கண்ணன் ஆகிய இருவரும் செயலாளர்களாக இருந்து செயல்புரிய முன் வந்தனர். என்னைத் துணைத் தலைவனாக்குகினர். அ. சீநிவாசராகவன், கிருஷ்ணசாமி, டி. கே. ஷண்முகம் முதலிய சிலரைச் செயற் குழுவினராக்கினோம்.

'சுதந்திரம் எனது பிறப்புரிமை; நான் அதை அடைந்தே தீருவேன், என்று முழக்கஞ் செய்த திலகர் பெருமான் பெயரால் அழைக்கப் பட்ட மணல் திட்டில் அமர்ந்து நாங்கள், வகுத் இந்தப் போர்த்திட்டம் அடுத்த நாள் தினசரிப் பத்திரிகைகளில் வெளிவந்தபோது அதற்குப் பாரதியன்பர்களிடமிருந்து மட்டுமல்லாமல் பொது மக்களிடமிருந்தும் பெரும் வரவேற்பு இருந்தது ஆனால், இதுவரை பாரதியின் பரம பக்தர்கள் என்று சொல்லிக்கொண்டிருந்தவர்களும் திணவுச் சின்ன முறயற்சியில் ஈடுபட்டிருந்தவர்களில் முக்கியமானர்களும் நாங்கள் மேற்கொண்டிருந்த நன் முயற்சிக்கு உதவ முன் வரவில்லை. எங்கள் ஆர்வத்தைக் குலைக்கவும் முயன்றனர் வ. ரா அவர்களைத் தலைவராக இருக்க விடாமல் தடுத்து விட்டனர்.

அச் சமயம் வ. ரா அவர்களுக்கு மணிவிழா கொண்டாடி நிதியுதவி புரிய. கல்கி ஆதரவில் நாங்கள் பலர் குழுவாகச் சேர்ந்து பணிபுரிந்து கொண்டிருந்தோம் வ. ரா. பாரதி விடுதலைக் கழகத்துக்டித் தலைவரானல் அவருக்காகத் திரட்டப்படும் நிதி முயற்சிக்கு குந்தகம் ஏற்படும்; ஏ. வி. எம். போன்ற செல்வர்களிடமிருந்து பொருளுதவி கிடைக்காது என்றெல்லாம் பய முறுத்தல் செய்யப்பட்டது

வ. ரா. அவர்கள் மட்டும் எங்களின் நன் முயற்சிக்கு நல்வாழ்த்து நல்கினார். ஆனால், அவர் தாம் தலைவராயிருக்க இயலாத நிலையை இங்கிதமாக எடுத்துச் சொன்னார். எதிர்ப்பாளர் முயற்சியை ஏற்கனவே அறிந்திருந்ததால், வ.ரா, தலைவராயிருக்கத் தயங்குங் குறிப்பறிந்து, அவரைத் தலைமைப் பொறுப்பிலிருந்து விடுவித்து விட்டோம். அவருக்குப் பதிலாக, கழக நண்பர்கள் துணைத் தலைவராயிருந்த என்னையே தலைவனாக இருந்து பணியாற்றுமாறு செய்து விட்டனர்.

அடுத்து, நாங்கள் பாரதி பாடல்களை எல்லோரும் எவ்விதமாகவும் பயன் படுத்திக் கொள்ளும் விதத்தில் பொதுவுடைமையாக்குவதற்கு உரிய காரணங்களையும் வேண்டிய விளக்கங்களையும் தெரிவித்து அரசாங்கத்துக்கு விண்ணப்பம் விடுத்தோம். இவ்விஷயத்தில் எங்கள் முயற்சி வெற்றி பெறுவதற்கு உதவி புரிய வேண்டுமென்று சட்டசபை உறுப்பினர் சிலரையும் கேட்டுக் கொண்டோம்.

இதற்கிடையில் பாரதி பாடல்களைச் சிறைப் படுத்தி வைத்திருந்தவர்கள் எங்கள் முயற்சிக்கு எதிராகப் பல காரியங்களைச்செய்து வருவதாகவும் செய்தி வந்து கொண்டிருந்தது. ஆகவே, நாங்கள் மேற்கொண்டுள்ள மகத்தான முயற்சி வெற்றிபெறப் பெரும்போராட்டம் நடத்தவேண்டியிருக்கும் என்று எண்ணி அதைச் சமாளிப்பதற்கான சூழ்நிலைகளை உருவாக்கிக் கொண்டிருந்தோம்.

ஆனால், நாங்கள் எதிர்பார்த்ததற்குமாறாக, எங்கள் நன்னோக்கம் மிகவும் எளிதில் நிறைவேறுவதற்கான நல்லறிகுறிகள் தென்பட்டன.

எங்கள் விண்ணபத்தை அச்சமயம் சென்னை மாநிலத் தலைமையமைச்சராயிருந்த ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் உடனே பரிசிலனைக்கு எடுத்துக்கொண்டார் எங்கள் கோரிக்கையில் நியாயம் இருந்ததாலும் பொதுநலம் போதித்திருந்தாலும் அவர் பரிவோடு இதற்கு ஒரு நன் முடிவு காண விரும்பினார்.

பழுத்த தேசபக்தரான அவர் பாரதி பாடல்களைப் பொதுவுடைமையாக்க அவசர சட்டமே பிறப்பிக்க முற்பட்டார். இது குறித்து அட்வகேட் ஜெனரலிடம் கலந்து ஆலோசித்திருக்கிறார். உத்திரவு பிறப்பிப்பதில் அப்படியொன்றும் சிக்கலில்லை. ஆனால் எதற்கும் பாரதியாரின் நேர்வாரிசுகளான மனைவி மக்களின் சம்மதத்தைப் பெற்று விடுவது நல்லது என்று அரசாங்க வழக்கறிஞர் யோசனை கூறியிருக்கிறார்.

அதன்படி, ஓமந்தூரார் 'தினசரி' ஆசிரியர் டி. எஸ். சொக்கலிங்கம் அவர்கள் வாயிலாக, எங்களுக்கு இத்தகவலைத் தெரிவித்தார். நான் உடனே, பாரதி குடும்பத்தினரைச் சந்திக்கும் முயற்சியில் இறங்கினேன். பாரதி குடும்பத்தை நன்கறிந்திருந்த வ. உ. சி. கல்லூரி முதல்வராயிருந்த அ. சீனிவாசராகவனுக்குத் தந்தி கொடுத்து வரவழைத்தேன்.

பின், அவர், நான், டி. கே. ஷண்முகம், வல்லிக்கண்ணன், திருச்சி வானொலி நிலயத்திலிருந்த மு. கணபதி ஆகிய ஐவரும் திருநெல்வேலி சென்றோம்

நாங்கள் திருநெல்வேலிக்குச் சென்ற சந்தர்ப்பம் இருக்கிறதே! அது என்னைப் பொறுத்தவரையில் மிகவும் கொடிய சோதனை யான காலம். 4 வயதுள்ள என் ஒரே மகன் கடுமையான காய்ச்சல் கண்டு படுக்கையி லிருந்தான். இந்நிலையில் நான் வெளியூருக்குச் செல்வது உசிதமல்ல என்று என் அன்னையாரும் மனைவியும் உறவினரும் அக்கம் பக்கத்தாரும் எனக்கு கூறினர்.

பொது நலத்தொண்டில் ஈடுபட்டிருக்கை யில் அதுவும் ஒரு நல்ல லட்சியத்திற்காகப் பாடுபட்டுக் கொண்டிருக்கையில் குடும்பநலனைச் கருதிக் கடமையில் பின்வாங்க என் உள்ளம் இடந்தரவில்லை.

அந்துடன், டி. எஸ், சொக்கலிங்கம், 'பாரதி பாடல் உரிமையை வைத்திருப்போர் லலிதா பாரதிக்குப் பாட வாய்ப்புத் தந்து சரிக்கட்டப் பார்ப்பதாகத் தெரிகிறது. அவர்கள் சூழ்ச்சி பலிக்காமல் பார்த்துக் கொள்ள நீங்களே பாரதி குடும்பத்தினரைச் சந்தித்து சம்மதம் பெற முயல்வது தான் நல்லது, என்று அறிவுறுத்தினர்.



எனவே, நான் பரம்பொருள் மீது பாரத்தைப் போட்டு விட்டுப் புறப்படலானேன். குடும்ப டாக்டரும் என் மகனைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொள்கிறேன் என்று தைரியஞ் சொல்லியனுப்பினர், ஆனால் விதி வேறு வித மாக வேலை செய்தது.

என் மகனைப் பிடித்திருந்த நோய் 'டிப்தீரியா' என்ற கொடிய நச்சுக் காய்ச்சல் என்று, இறந்த பின்பே தெரிந்தது. நாங்கள் திருநெல்வேலி சென்ற மறுநாளே அந்நச்சுக் காய்ச்சல் என் குமாரனின் உயிரைக் கொள்ளை கொண்டு விட்டது. எனக்குக் கொடுக்கப்பட்ட தந்தி பாரதி குடும்பத்தினரின் சம்மதம் பெற்றுச் சென்னை திரும்பிய பின் சேர்ந்திருக்கிறது. அத னால் நான் வீட்டையடையும் வரை என் மகன் பிரிவு தெரியாது உயிருடன் விட்டுச் சென்ற மகனை வெற்றுடலையும் பார்க்கமுடியாத அவல நிலைக்குத்தான் நான் ஆளானேன்.

தேர்ந்த டாக்டர்களாலேயே இன்ன ஜுரம் என்று தெரிந்து கொள்ள முடியாதவாறு ஆட்டிப் படைத்த அந்த 'டிப்தீரியா' ஜுரத்துக்கு அக் காலத்தில் தனிப்பட்ட டாக்டர்களால் ஒன்றுஞ் செய்ய முடியாதாம்; இந்தச் சுரம் கண்டவுடனே அரசாங்க மருத்துவ மனையில் சேர்த்துச்சிகிச்சை செய்வித்தால்தான் ஒரு வேளை உயிர் தப்ப முடியும் என்று கதை கதையாகச் சொன்னார்கள்.

எனக்கு ஆறுதல் கூற வந்தவர்களில் ஆப்த ரான இசையரசு தண்டபாணி தேசிகர் என் மகனுக்கும் இக்கொடிய காய்ச்சல்தான் காலனாக அமைந்தது என்றார்.

பாரதி பாடல்களுக்குச் சுதந்திரம் வாங்கித் தரச் சென்ற நான் என் ஒரே மகனின் உயிருக்கு விடுதலை தேடித்தந்துவிட்டேன் என் கடமையை முடித்தேன்.

இத்துயர நிகழ்ச்சிக்கிடையேதான் பாரதி பாடல்களைப் பொதுவுடைமையாக்கிய மகத்தான சரித்திர சம்பவம் நடந்திருக்கிறது என்பதை என்னால் இங்கு குறிப்பிடாமல் இருக்க முடிய வில்லை.

தலைமையமைச்சர் எங்களைக் கேட்டுக் கொண்டபடி, நாங்கள் திருநெல்வேலியில் இருந்த பாரதியாரின் மனைவி மாது ஸ்ரீ செல்லம்மாவையும் மகள் தங்கம்மாவையும் சந்தித்து எங்கள் கழகத்தின் முயற்சியையும் அரசாங்க ஆதரவையும் தெரிவித்தோம்.

அவர்கள் இதைக்கேட்டுப் பெரு மகிழ்ச்சியடைந்தனர். 'பாரதி பாடல்களைப் பொதுவுடைமையாக்குவதில் எங்களுக்கு முழுசம்மதமே என்று தெரிவித்து' நாங்கள் கேட்டுக் கொண்டபடி, சிறிதும் தயக்கமின்றிக் கடிதம் எழுதித்தந்தார்கள்.

பாரதி குடும்பத்தினர் எழுதித் தந்த சம்மதக் கடிதத்தை நாங்கள் ஓமந்தூராரிடம் ஒப்படைத்தோம் அவர் உடனே ஓர் உத்திரவைப் பிறப்பித்து, பாரதி பாடல்களைப் பொதுவுடைமையாக்கினர்.

இதற்கிடையே, எங்கள் நன்முயற்சி அரசு ஆதரவு பெற்று வெற்றியுறும் நிலையை உணர்ந்து கொண்ட நண்பர் ஏ. வி. மெய்யப்பர் தாம் உரிமை வைத்திருந்த பாரதி பாடல்களின் பத்திரங்களை என்னிடம்தந்து 'உரிய முறையில் பயன்படுத்திக்கொள்ளுங்கள். நான் இனி குறுக்கே நிற்கமாட்டேன்' என்று கூறினர். நான் உடனே அந்த தஸ்தாவேஜுகளை அரசாங்கத்திடம் ஒப்படைத்து விட்டேன்.

முடிவாக அரசு பாரதி பாடல்களைப் பொதுவுடைமையாக்கும் சட்டத்தை அமல்படுத்தியதும், நாங்கள் பிரதமர் ஓமந்தூராரையும் கடைசி நேரத்திலாயினும் பெருந்தன்மையோடு தம் உரிமையை விட்டுத்தந்த ஏ. வி. மெய்யப்பரையும் எங்கள் நன்றியைத் தெரிவித்துப்பாராட்டுவதற்காக மயிலை உட்லண்ட்ஸ் ஒட்டலில் கூட்டமொன்று ஏற்பாடு செய்தோம்.

இப் பாராட்டுக் கூட்டம் எங்கள் கழகத்தின் சார்பிலேயே நடப்பதால் அதன் தலைவராயிருக்கும் நானே தலைமை வகிக்க வேண்டுமென்று செயற்குழுவினர் கருத்துக் கூறினர். நான் அதை ஏற்கவில்லை கல்கி ஆசிரியரை அழைக்கலாம் என்றேன்,

இது கேட்டு, சீதாராம் முதலிய நண்பர்களுக்கு உண்டான ஆத்திரம் இருக்கிறதே !

" என்ன ஜீவா ! விளையாடுகிறீர்களா? அந்த மனுஷன் நியாயமான நம் கிளர்ச்சிக்குக் கூட எதிராக இருந்தவர் அவரைப் போய் ........"

" அதை மறந்து விடுங்கள். அவர் ஒரு பெரிய பத்திரிகையை நடத்தி வருபவர். பல திறப்பட்டவர்களுடைய அபிப்பிராயங்களை அநுசரித்து நடக்க வேண்டிய நிலையிலுள்ளவர். அவர் முனைந்து பணிபுரியவில்லையென்ருல் பாரதி பிறந்த ஊரில் மணி மண்டபம் ஏற்பட்டிருக்குமா ? இதை எண்ணிப்பாருங்கள்,

"எப்படியோ செய்து கொள்ளுங்கள்" என்று திருலோகம் பிணங்கிக்கொண்டு போகலானார்.

அவரைச் சமாதானப்படுத்தி அவருடன் கல்கியைச் சந்திக்கச் சென்றேன்.

அச்சமயம் அவர் எங்களைச் சற்றும் எதிர் பார்க்கவில்லையென்பது அவரது திகைப்பிலிருந்து தெரிந்தது.

நான் அவரைப் பார்க்க வந்த விஷயத்தைச் சொன்னதும் கல்கி மேலும் திகைத்துப்போனார். "நான் உங்கள் முயற்சிக்கு எதிராயிருந்தவன் என்று தெரிந்துமல்லவா! என்னை விட்டு வேறு பிரமுகர் யாரையாயினும்......"

உடனே நான் குறுக்கிட்டு. சந்தர்ப்ப சூழ்நிலை எப்படியோ இருந்திருக்கும். 'பாரதக்கு நிலையான நினைவுச் சின்னம் ஏற்படுவதற்கு மூல காரணமாக இருந்த நீங்கள் தான் பாரதி பாடல் பொதுவுடைமையானதைக் கொண்டாடும் நிகழ்ச்சியைச் சிறப்பாக நடத்தித்தர வேண்டும்.

கல்கி என் கரங்களைப் பற்றிக்கொண்டு "ஜீவா சார்! நான் உங்களை எவ்வளவோ காலம் பழகியும் புரிந்து கொள்ளாமல் போய்விட்டேன். இடையிலுள்ளோர் நம்மிடையே நட்பு ஏற்படாமலே செய்து வந்திருக்கின்றனர் நீங்கள் கொண்ட கொள்கைக்காகப் போராடுபவரேயொழிய மாறுபட்ட கருத்துடையோரிடம் எவ்விதமாகவும் மனமாற்சரியங்கொள்ளாதவரென்று இப்போது தான் உணர்ந்தேன். உங்கள் கடமையுணர்வைப் போற்றுகிறேன் கூடிய சீக்கிரம் உங்கள் கண்ணியத்தைக் கௌரவிக்க ஒரு வாய்ப்பையுண்டாக்கிக் கொள்வேன்" என்று தழுதழுப்போடு கூறினார்.

திருலோகத்தைக் கட்டிக்கொண்டு, "நீங்களெல்லாம் கொள்கை வீரர்கள் பாராட்டுக் கூட்டத்தைப் பிரமாதமாக நடத்திவிடுவோம்" என்று உற்சாகமாக உரைத்தார்.

குறித்த நாளில் பாராட்டுக்கூட்டம் சிறப்பாக நடைபெற்றது அ சீனிவாசராகவன் உட்பட அறிஞர் பெருமக்கள் பலர் எங்கள் விடாமுயற்சியையும் பிரதமரின் பேராதரவையும் ஏ. வி. எம்.மின் தாராளத் தன்மையையும் மிகவும் பாராட்டினர்."

ஏ வி. எம். மேடையில் வந்து அமர்வதற்கே கூசினார். நாங்கள் விடவில்லை அவருக்குக் தக்கபடி மாலை மரியாதை செய்தோம்.

இப்பாராட்டுக் கூட்டத்தில் நாங்கள் சந்தர்ப்பத்தை நழுவ விடவில்லை. பாரதி குடும்பத்துக்கு அரசு தக்க சன்மானம் வழங்க வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொண்டோம்

உடனே பிரதமர் பாரதி குடும்பத்துக்குக் கட்டாயம் உதவுவோம் என்று வாக்குறுதியளித்ததோடு அவர் பதவியிலிருந்து விலகுவற்கு முன்பே 15,000 ரூபாய் சன்மானம் வழங்கினர்.

மாது ஸ்ரீ செல்லம்மாளுக்கும் இரு மகள்களுக்கும் பேரன் பேத்திகளுக்கும் சொல்ல முடியாத மகிழ்ச்சி. திருலோகம் அவர்களைச் சந்திக்கும் போதெல்லாம் "என் கணவர் போன பின் முதன் முதலாக உங்களால் தான் நாங்கள் அரசின்

சன்மானத்தைப் பெறுகிறேம். அவர் மறைந்த 25 வருஷங்களில் அவர் பெயரால் எங்களுக்கு யாரிடமிருந்தும் எங்கிருந்தும் எவ்வித உதவியும் கிடைக்கவில்லை'' என்று நன்றியோடு சொன்ஞர்.

ஆனல், பாரதி பாடல்களை எவரும் எவ்வித மாகவும் பயன்படுத்திக் கொள்ளும் முன் அரசாங் கம் பாரதி பாடல்களை வசனங்களை வரிசைப் படுத்திச் சுத்தப் பதிப்பாக முதலில் வெளியிடும் என்றும் அப்பதிப்பை ஆதாரமாகக் கொண்டு பின் எவரும் புத்தகமாக வெளியிட்டுக் கொள்ளலாம் என்றும் சர்க்கார் உத்திரவு நிபந் தனை விதித்தது. அதன்படி அரசாங்கப் பதிப்பு பி எஸ் குமாரசாமி ராஜா முதன் மந்திரியாக வந்த பின் வெளியாயிற்று.

நாங்கள் பாரதி விடுதலைக் கழகத்தைத் தோற்றுவித்து பாரதி பாடல்களுக்கு விடுதலை யளிக்கக் கஷ்ட நஷ்டப்பட்டுப் பெரு முயற்சி செய்தோமேயொழிய, அதன் பின் விளைவுகளில் நாங்கள் பங்கு கொள்ளவில்லை, எவ்விதப் பயனை யும் அடையவில்லை; பாராட்டையும் பெறவில்லை.

பாரதி பாடல்களைப் பதிப்பிக்க அரசாங்கம் நியமித்த குழு எதிலும் எங்களில் யாரும் இடம் பெறவில்லை. ஒரு வேளை ஓமந்தூரார் தலைமை யமைச்சராகத் தொடர்ந்திருந்தால் அவர் எங்களை நியமித்திருப்பாரோ? என்னவோ?

பாரதி பாடல்கள் பொதுவுடைமையாவதை விரும்பாதவர்கள் எங்களின் இம்முயற்சிக்கு கேடு சூழ்ந்தவர்கள் பலர் பாரதி பாடல் பதிப்பு சம்பந்தமாக அரசு நியமித்த குழுக்களில் முயற்சி செய்து முதலிடம் பெற்றுவிட்டனர்.

பாரதி பாடல்களைத் தாங்கள் தான் பொது வுடைமையாக்கியதாக அவர்களில் சிலர் சிறிது காலமாகத் துணிந்து சொல்லிக் கொண்டு வருகின்றனர். பாரதி மணிமண்டபம் கட்ட முதற் காரணமாக இருந்த கல்கிதான் பாரதி பாடல்களையும் பொதுவுடைமையாக்கப் பெரு முயற்சி செய்தார் என்று கூறத் தொடங்கி விட்டனர். மனச்சாட்சியைக் கொன்றுவிட்டு வரலாறுகளில் எழுதவும் முனைந்து விட்டனர்.

நீதி, தருமம் என்று ஒன்று இருந்தால், உண்மை இன்னதென ஒரு நாள் வெளிப்படும்; சத்தியமே நிலைத்து நிற்கும். பொய்யர்களின் புரட்டும் பம்மாத்தும் விரைவில் வெளிப்பட்டு விடும்.

தமிழகம் மட்டுமல்லாமல் தமிழ் வழங்கும் வெளிநாடுகளில் கூடப் பாரதி பாடல்கள் ஒலிக்க வேண்டும்; யாரும் எளிதில் வாங்கக்கூடிய மலிவு விலையில் பாரதி நூல் கிடைக்க வேண்டும் என்று எண்ணி நாங்கள் பாரதி விடுதலைக் கழகம் வாயிலாகப் புரிந்த அருந்தொண்டினுல் இப் போது தமிழ் படிக்கும் அனைவருமே பாரதி கவிதைகளையும் வசனங்களையும் தங்கு தடை யின்றி அனுபவித்து வருகிருர்கள். அது ஒன்றே எனக்கு மன நிறைவையளித்திருக்கிறது

பாரதி நூற்ருண்டு விழாவைப் பெருஞ் சிறப்புடன் கொண்டாடத் திட்டமிட்டுப் பணி புரிந்து வரும் தமிழக அரசு எங்கள் போன்ற பாரதியன்பர்களின் குறிக்கோளையும் கருத்திற் கொண்டு பாரதி பாடல்களின் தனிச்சிறப்பையும் குக்கிராமங்களிலுள்ள பாமரமக்களும் புரிந்து கொண்டு பாரதி பாடல்களைப் பயிலுமாறு செய்வார்கள் பாரதியாரை - பாரதி பாடல்களைப் பார் அனைத்துக்குமே பொதுவுடைமையாக்கும் பெரும் லட்சியத்தில் ஈடுபடுவார்கள் என்று நான் நம்புகிறேன்.

## மாஸ்கோவில் பாரதி விழா!

பாரதி நூற்ருண்டு விழா, 1982-ஆம் ஆண்டு மாஸ்கோவில், சிறந்த முறையில் கொண்டாடப்பட இருக்கிறது. இந்த விழாவையொட்டி கருத்தரங்குகளும் மிகச் சிறப்பாக நடைபெற இருக்கிறது

# வாழ்க்கைப்பாடம்

— தி. சா. ராஜு

நாற்பது ஆண்டுகள் என்பது வாழ்க்கையின் பெரும்பகுதி, அந்தக் காலத்தை ஒரே துறையில் செலவிட்ட பிறகு திரும்பிப் பார்க்கிறேன். ஐந்திற்கு இரண்டு பழுதில்லை.

ஏறக்குறைய இருபது ஆண்டுகளுக்கு முன்பு இந்த வாழ்க்கையில் ஒரு பெருந்தேக்கம் ஏற்பட்டிருந்தது. முன்னேற வழியே இல்லாத அந்த நிலையில் என் வாழ்க்கையின் வழிகாட்டியாக விளங்கிய கவிஞரை அணுகி இந்தத் துறையிலிருந்து விலகுவதற்கான யோசனையைக் கூறினேன். அவர் அதை ஏற்கவில்லை.

தொடர்ந்து ஒரே பணியைச் செய்வதில் ஓர் இன்பம் இருக்கிறது. நிச்சயம் அது நல்ல விளைவுகளைத் தரும். மேலும் இலக்கியத் துறைக்கு வந்து நீ என்ன சாதித்து விடப் போகிறாய்? என்று அறிவுரை வழங்கினார்.

1962— இந்திய வரலாற்றிலேயே ஒரு திரும்பும் புள்ளி நாடும் அதன் தலைவர்களும் ஒரு சிறந்த பாடத்தைக் கற்றனர் தன்னைக் கடவுள் நம்பிக்கை அற்றவன் என்று சொல்லிக்கொள்ளுவதில் பெருமை கொண்டிருந்த நேருவே, முதல் முறையாக, தெய்வத்தை நம்பு, கூடவே வெடி மருந்தையும் தயாராக வைத்திரு என்றார். படையில் பெரும் விஸ்தரிப்பு ஏற்பட்டது கூடவே என் வாழ்விலும் முன்னேற்றம் ஏற்பட்டது — இன்னும ஆயிரக்கணக்கான வர்க்கும் — சமஷ்டி பிராரப்தம் என்று அற நூல்கள் இதைக் கூறும்.

ஓர் உலகப் பெரும் போர், மூன்று தேசியப் படையெடுப்பு, பல மோதல்கள் ஆகியவற்றில் நேரிடையாகவே பங்கு பெறும் வாய்ப்புக் கிட்டிட்டிற்று அவற்றின் மூலம் தெரிந்து கொண்ட பாடம், இந்த நாடு நெருக்கப்பட்டால் தான் செயல்படுகிறது அப்போது நன்றாகவே பணி புரிகிறது — அந்த உத்வேகத்தைத் தொடர்ந்து பயன்படுத்திக் கொள்ள நமது தலைவர்கள் தவறி விட்டார்கள். காந்தியுகத்திலிருந்து இன்று வரை இதுதான் சத்தியம். இஸ்ரேல் உதாரணம் ஒரு யதார்த்தம்.

தீண்டாமை ஒழிப்பு, மதுவிலக்கு, சமுதாய சீர்திருத்தம், விலைவாசி உயர்வுத் தடுப்பு, பயிர்த் தொழில் அனைத்திலும் ஒரு போர் ஆவேசத்தை, ஒரு முனைப்பாங்கை நாம் கொண்டு வரவில்லை. அதற்கேற்ற தலைவர்கள் நம்மிடம் இல்லை. 1977 ல் ஒரு பரிசோதனை நடந்தது அது நல்ல பயனையும் விளைவித்தது. ஆனால் மேல் மட்டத்தில் கண்ட விரிசலினால் மீண்டும் பழைய பாதை சக்தி நிறைந்த சுவடு விழுந்த தடம்

படை வாழ்க்கையில் எத்தனையோ பெரும் புள்ளிகளைச் சந்தித்திருக்கிறேன், பழகியிருக்கிறேன் மிக உயர்ந்த பதவி வகித்தவர்களிடம் வெறுமையையும் நடுத்தர அலுவலர்களிடம் மின்னும் அறிவாற்றலையும் கண்டு வியந்திருக்கிறேன். அது ஒரு விடுவிக்க இயலாத புதிர்.

முன் வினைப்பயன், பாரம்பரியம், பிறந்த நேரத்தில் கோள்களின் அமைப்பு, வளர்ந்த சூழ்நிலை, எதிர்ப்பட்ட வாய்ப்புக்கள், நண்பர்களின் ஆதரவு, இவை அனைத்தின் தொகுப்பாகத்தான் ஒரு மனிதனின் வாழ்க்கை உருவாக்கப்படுகிறது. மிகச்சிறந்த ஆட்டக்காரன் கூட இறுதிப் போராட்டத்தில் தோற்று விடுவதை — இம்மி அளவு வித்தியாசத்தில் விழுந்து விடுவதைக் கண்டு நான் வியந்திருக்கிறேன். அந்தக் காட்சியில் ஒரு கவிதைக் கவர்ச்சி இருக்கிறது — எப்போதுமே

'இந்த நாட்டின் புத்தி ஜீவிகள் நம்மை வழி நடத்தத் தவறி விட்டார்கள்' என்று தமது இறுதிக் காலத்தில் கூறினார் நேரு. அவரே மிகச் சிறந்த புத்தி ஜீவி. ஆனால் அண்ணலின் ஆன்ம வலிமை அவரிடமில்லை.

இன்று நினைத்தால் கூட வேடிக்கையாக இருக்கிறது. அந்த மன்னன் எல்லோரையும் கடற்கரைக்கு அழைத்துச் சென்ருன் — உப்புக் காய்ச்ச பகட்டான ஆடைகளை எரிக்கச் சொன்னுன் — எளிய உடைகளை அணியச் செய்தான். மிகக் குறைந்த உணவையே உண்டான் — உண்மையையே பேசினன் — எதிரிகளிடம் கூடத் தனது போர்த்திட்டத்தை முன்கூட்டியே அறிவித்தான். இவற்றை நம் கண் முன்பு பார்த்தோம்

'இப்படி ஒரு மனிதன் நம்மிடையே உலாவினன் வாழ்ந்தான் என்று பிற்கால சந்ததிகள் நம்ப இயலாது' என்று கூறினர் ஈன்ஸ்டின் அது பரம சத்தியம்

பல கோடி மக்கள், பல நூறு ஆண்டுகள் புரிந்த தவத்தின் விளைவாக அத்தகைய அறமகன் நம்மிடையே தோன்றினன். அவனுக்கு நாம் கொடுத்த பரிசு ஈய ரவை. தூ ! வெட்கமில்லை?

ஆறில் ஒரு பகுதி மக்களைத்தரம் குறைந்தவர்களாக மதிக்கிறோம். அவர்களுக்கு மன அளவில் சமத்துவம் கொடுக்கவில்லை. அதன் பின் விளைவாக நாடே மூன்று துண்டாகிவிட்டது இன்னும் நாம் பாடம் கற்கவில்லை என்றல் அது மானக்கேடு நமது சமய ஒழுக்கு மாபெரும் பொய். தமது ஒவ்வொரு கையெழுத்துக்கும் ஐந்து ரூபாய் வாங்கி அதைத் தாழ்த்தப்பட்டவர்க்கு அளித்தான் அந்த மன்னன் அவனுக்கு நாம் துரோகமிழைக்கிறோம்.

சாதிப் பிரிவு என்பது ஒரு போலி அமைப்பு எல்லா மனிதருக்கும் சமவாய்ப்பளிக்க வேண்டும். தொடர்ந்து ஒரு மனிதனின் முன்னேற்றம் அவன் கையிலேயே இருக்கிறது என்ற பாடத்தைப் படை வாழ்வு போதிக்கிறது செங்குந்தவர், மறவர், கள்ளர், மூப்பர், தீயர், யாதவர், அனைவரும் பீரங்கிப் படையில் இருக்கிறார்கள் அங்கே அவன் செவண்டி டு அல்லது சிக்ஸ்டி த்ரீ, அவனுடைய உடமைகள், உரிமைகள் எல்லாம் சமம். அவன் ஓர் இந்தியப் போர் வீரன், அவ்வளவு தான்.

ஒரு வேளை சீனர்கள் முறை இங்கும் பயன் தருமோ? அங்கே பாலும் தேனும் ஓடவில்லை என்பது உண்மைதான். ஆனல் எல்லோருக்கும் உணவு கிடைக்கிறது. அது இந்த யுகத்தின் மாபெரும் சாதனை அல்லவா? டிரஃபால்கர் ஸ்கொயரிலும், லெனின் சதுக்கத்திலும் கூட கையேந்துபவர்கள் இருக்கின்றார்கள் நான்கிங்கில் இல்லை.

வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர் !
வயிற்றுக்குச் சோறிட வேண்டும் ;
வெறும் சோற்றுக்கோ வந்ததிந்தப் பஞ்சம் !

என்று மாய்ந்து போனன் அந்த யுக புருஷன். அவனுடைய கனவு படை வாழ்வில் பலிப்பதைக் கண்டேன். அங்கு எல்லோருக்கும் சோறுண்டு - கௌரவமான முறையில்.

'இது என் நாடு, இதன் ஆறுகளும், மலைகளும், வனங்களும், என் சொத்து. இதைப் பாதுகாக்க எதையும் விலையாகத்தரலாம்' என்ற மிகச் சிறந்த பாடத்தைப் படை வாழ்வு கற்பிக்கிறது. அந்த உண்மையை ஒவ்வொரு குழந்தைக்கும் வலியுறுத்த நாம் தவறிவிட்டோம் அத்தகைய ஒரு நல்ல முறையை இனியாவது நாம் உருவாக்கினல் தான் இந்த நாட்டிற்கு விமோசனம் உண்டு.

இவ்வளவு மட்டுமே எனக்குச் சொல்லத் தெரிகிறது !

# பாவாணர் பாரதி

புத்தனேரி, ரா. வேங்கடாசலம்

பாவாணர் பாரதிக்கு நூற்றாண்டு விழா! பட்டிதொட்டிகளிளெல்லாம் பாரதியின் பாடல்கள் ஒலிக்கப்போகிறது! வழக்கமாகப் பாரதியின் நினைவு அவர் பிறந்த நாளின்போதுதான் வரும். அதுவும் யாரோ சிலரின் தூண்டுதலின் காரணமாக.

மக்களுடைய நல்ல பண்பு "கடந்து வந்த பாதையை மறந்துவிடுதல்; வாழும் நாட்களில் எவ்வகையிலேனும் வகையாக வாழ வழி செய்து கொள்வது" என்பதுதான்! அந்தப் பண்பின் விளைவாக கடந்தவை மட்டுமல்ல நமக்குச் சன்மார்க்கத்தைப் புகட்டிய ஆன்றோர்களை சான்றோர்களை, விடுதலைக்கு வித்திட்ட அரும்பெரும் தலைவர்களை நம் நினைவிலிருந்து அகற்றிவிட்டு வாழ்க்கையை அமைத்துக்கொள்வது என்னும் நிலைக்கு வந்து உள்ளோம். எனவேதான் நித்தமும் நினைத்து, அவர்தம் அருமைபெருமைகளைச் சொல்லி அவர்கள் வகுத்துத்தந்த நெறிமுறைகளைப் பின்பற்றிச் செம்மையாக வாழ்வதை விடுத்து எப்படியோ நினைவுக்கு வரும் அல்லது நினைவுபடுத்தப்படும் அத்தகைய பெரியவர்களின் இறந்த அல்லது பிறந்த நாட்களில் தேனொழுகப் பேசுவதும் முதலைக் கண்ணீர் வடித்து மக்கள்முன் அவர்களது தொண்டரடிப் பொடியாகத் தம்மை விளம்பரப்படுத்திக் கொள்வதில் ஈடுபடுவோர் பெரும்பாலோராக இருக்கின்றனர்கள்

பாரதிக்கு வயது நூறு! 'பாரதி யார்? என்று கேட்டவர்களும் 'பாரதி கவிஞனா'? 'அவன் எழுதியது கவிதை இலக்கணத்திற்குப் பொருந்துகிறதா' என்று வினாக்களை எழுப்பியவர்களும் விழா எடுப்பதில் அக்கறை காட்டும் சூழலில் இன்றிருக்கிறார்கள். ஆனால் பாரதி இன்று நம்மிடையே இருந்திருந்தால் . கவனிப்பாரற்று உலவும் கணக்கற்ற பாடலாசிரியர்களில் ஒருவராக ஒதுக்கித் தள்ளப்பட்டிருந்தாலும் வியப்பில்லை!

விழா எடுக்கும் நாம் எந்த அளவுக்குப் பாரதியின் கனவுகளை நனவாக்கினோம்? எண்ணிப் பார்ப்போமா?

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை பாடினர்

"பாட்டுக் கொரு புலவன் பாரதியடா—அவன்
பாட்டைப் பண்ணோ டொருவன் பாடினானேயடா
கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனேயடா—அந்த
கிறுக்கில் உளறுமொழி கேட்பாயேயடா"

'கிறுக்கில் உளறுமொழி' என்று பகைமை பாராட்டியவர்களைச் சாடுவதற்காக அதையே கையாண்டு அவர்கள் வெட்டும்படி பாரதி பெருமையைப் பாடினர். பொதுவாகக் கவிஞர்கள் மிகுதியும் உணர்ச்சிவசப்படக்கூடியவர்கள் உள்ளத்தில் எழுச்சியும் மகிழ்ச்சியும் பெருக்கெடுக்கும்போது பொங்குமாங் கடல்போல இனிய தமிழ்ச் சொற்கள் தாமாகவே வந்து கவிதைகளில் இடம்பெற்றுக் கொள்ளும் பாரதி தேசபக்தியும் தெய்வ பக்தியும் நிறைந்தவர். எனவே அவருடைய ஆசையும், குறிக்கோளும் கற்பனையும் நாட்டின் விடுதலையிலும் சமுதாய விடுதலையிலும் மிகுதியாகச் சென்றதில் வியப்பில்லை. அத்துடன் தெய்வபக்திக்கும் அவர் சிறப்பளித்தார்.

அவருடைய பாக்கள் சொல்லில் புதியதாய், பொருளில் புதியதாய் சுவையில் புதியதாய் வளம் நிரம்பியதாக இலக்கிய உலகில் புதுமையையும் எளிமையையும் புகுத்திப் புரட்சி செய்வதாக அமைந்த காரணத்தால் அவருடைய வாக்குப்படியே "பாட்டுத் திறத்தாலே இவ்வையகத்தைப் பாலித்திட்டார்".

அவரது பாடல்கள் கோழைகளை வீரனாக்கின; குருடரையும் விழிக்கச் செய்தன; கூனர்களை நிமிர்த்தின; தூங்கிக் கிடந்த சமுதாயத்தைத் தட்டி எழுப்பின. ஆயினும் அந்தச் செயல்கள் நிலையற்றுப் போய் மீண்டும் கோழைகளாய் வீணர்களாய் வாழும் நிலைக்கு நாம் வந்து விட்டோமே! என்ற

பாரதியின் பாடல்கள் பாடப்படுகின்றன; புகழப் பெறுகின்றன. ஆம்! சுயாலத்திற்கும் மக்களைத் திசை திருப்புவதற்கும்தான்; உண்மை உணர்வோடு பாரதியின் நோக்கத்திற்கும் கொள்கைக்கும் கோட்பாடுகளுக்கும் அவர்தம் கனவை நனவாக்கும் வழிவகைக்கும் பயன்படுத்தப்பெறுகின்றனவா? இல்லையே!

எந்த நாட்டின் விடுதலைக்கு எந்த மக்களின் ஒற்றுமைக்கு ஏற்றத் தாழ்வுகள் அகல்வதற்கு வேட்கைகொண்டு தன் வாழ்நாளைச் செல விட்டானோ அது நிறைவேறிற்று?

நாம் 'சுதந்திரம்' அடைந்து விட்டது—பிற நாட்டார் பிடியிலிருந்து! விடுதலை! விடுதலை!! விடுதலை!!!

"ஏழை யென்றும் அடிமை என்றும்
எவனும் இல்லை ஜாதியில்
இழிவு கொண்ட மனிதரென்பது
இந்தியாவில் இல்லையே!
வாழி கல்வி செல்வம் எய்தி
மனம கிழ்ந்து கூடியே
மனிதர் யாரும் ஒரு நிகர்ச்ச
மானமாக வாழ்வமே!"

"மனமகிழ்ந்து கூடியே மனிதன் யாரும் ஒரு நிகர் சமானமாக" வாழ்கிறோமா? எங்கு பார்த்தாலும் சமுதாய ஏற்றத் தாழ்வுகள்; அடிமை உணர்வு; சாதிச் சண்டைகள்; மதமாச்சரியங்கள்; போட்டிகள் பொறாமை இவைதானே மலிந்துள்ளன?

"எல்லோரும் ஒன்றென்னும் காலம் வந்ததே—
பொய்யும்
ஏமாற்றும் தொலைகின்ற காலம் வந்ததே-இனி
நல்லோர் பெரியரென்றும் காலம் வந்ததே-கெட்ட
நயவஞ்சகக் காரருக்கும் நாசம் வந்ததே"

இதிலே எதுவந்தது? ஒன்றுமில்லையே? நயவஞ்சகக் காரர் நலமாக வளமாக வாழும் நிலைதானே உள்ளது?

"வீணில் உண்டுகளித் திருப்போரை நிந்தனை
செய்வோம்
வெறும் வீணருக்கு உழைத்துடலம்
ஓயமாட்டோம்"

அவர் என்னவோ ஆசையை எழுத்தாக்கி அசை யாக்கிச் சீராக்கித் தொடராக்கிக் கவிதையாக்கினர்! நடைமுறை என்ன? நேர் விரோதமாகத்தானே உள்ளது?

நல்லவனா? சமூகத்தின் மேன்மைக்குப் பாடுபடுவனா நன்மை செய்பவனா என்று யாராவது சிந்திக்கிறோமா? வீணில் உண்டுகளித் திருப் போருக்கும் வெறும் வீணருக்கும் உழைக்கும் கட்டாய நிலைதானே இப்போது,

"தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற-எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா
தமிழ்தில் இனியதடி பாப்பா—நம்
ஆன்றோர்கள் தேசமடி பாப்பா
சொல்லில் உயர்வுதமிழ்ச் சொல்லே-அதைச்
தொழுது படித்திடடி பாப்பா"

இப்போ பாப்பா குழந்தைகள் நிலை என்ன? தமிழையா படிக்கின்றன? பிறக்கிறதுக்கு முன்னமேயே 'எல். கே ஜி'யில் சேர்ப்பதற்கு ஆங்கிலப் பள்ளிகளில் பதிவு செய்யும் தமிழர் கூட்டம்தானே பெருகுகிறது? அப்படி நாம் வளர்க்கிற குழந்தைகள் வாயில் உயர்வு தமிழ்ச் சொல்லா வரும்? 'டாடி'யும் 'மம்மி'யும் தான் வரும்! "புல்லை யுண்கென வாளரிச் சேயினைப் போக்கல்" செய்த வினையது! "பேடிக் கல்வி பயின்றுழல் பித்தர் களாய்" நாம் நம் குழந்தைகளுக்குச் செய்யும் தீமை என்பதை அறிகிறோமா?

ஆங்கிலக் கல்வி தேவை இல்லை என்று சொல்லவில்லை நம் தாய்மொழித் தேர்ச்சிக்குப்பின் எத்தனை மொழிகள் வேண்டுமானாலும் அறிவுக்கு ஏற்ப ஆற்றலுக்கேற்ப படிப்பிக்கலாம்.

வளரும்போதே நம் மொழி புறக்கணிக்கப் படுவதால் குழந்தைகள் பண்பை இழக்கின்றன. பெற்றோருக்குத் தரவேண்டிய மரியாதையைப் பெறுவதில்லை. பொதுவாகவே குழந்தைகள் தாய்ப்பால் குடித்து வளராததால் பாச உணர்வைப் பெறுவதில்லை! தாய் மொழியும் அவர்களுக்கு இல்லை எனில் தமிழ்ப் பண்பு எங்ஙனம் வளரும்? ஆங்கிலக் கல்விக்கு அடித்தளம் அமைப்பதில் நமக்கிருக்கும்

அக்கறை பண்பைப்பற்றிய கவலையை மறக்கடித்து விட்டால் நம் பிற்கால சமுதாயம் எப்படி நன்ருக அமையும்?

நமது மாநிலத்தில் இருமொழிக் கொள்கைதான் இருக்கட்டும். அதற்காக நம் மொழியையே குழந்தைகள் புறக்கணிக்கும் அளவுக்குப் பாட திட்டமா? மாநிலத்தில் அமையும் எந்தப் பள்ளியிலும் ஆங்கில வழிக் கல்விப் பள்ளிகளிலும் நம் பைந்தமிழ் கட்டாயப் பாடமாக அமையவேண்டாமா மத்திய அரசுப் பள்ளிகளில் (சென்ட்ரல் ஸ்கூல்) தமிழ் நாட்டில் தமிழும் பாடமாக இருக்கவேண்டுமல்லவா? ஆங்கிலமும் இந்தியும்தானே கட்டாயமாக்கப்பட்டு உள்ளன!

"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவிலோங்கி இவ்வையம் தழைக்குமாம்
பூணு நல்லறத் தோடிங்குப் பெண்ணுருப்
போந்து நிற்பது தாய்சிவ சக்தியாம்;
நாணும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்
ஞான நல்லறம் வீர சுதந்திரம்
பேணு நற்குடிப் பெண்ணின் குணங்களாம்
நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கும் இருப்பதால்
செம்மை மாதர் திறம்புவ தில்லையாம்!"

பாரதியின் ஆசை எவ்வளவு பெரிது!

"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொண்டால் அறிவிலோங்கி வையம் தழைக்கும்" நடைமுறை என்ன? ஆண்களுடன் எதிலும் போட்டி; எதிலும் சமநோக்கு, பாரதிதான் சொல்லிவிட்டாரே 'அச்சமும் நாணமும் நாய்கட்கு' என்று. நாணத்தை விட்டு அச்சத்தைப் போக்கி ஆண்களைப்போலவே ஆண்களுக்கென சமுதாயம் அனுமதித்திருக்கும் ஒழுக்கக் கேட்டுக்குமல்லவா இலக்காகின்றனர்.

'ஞானம் நல்லறம்' 'அஞ்சாத நெறிகள்' 'திமிர்ந்த ஞானச் செருக்கு' இவையாவும் ஒருங்கே கொண்டிருக்கும் பெண்களை அல்லவா அவர் கற்பனை செய்தார்.

"நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும் நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறி" யோடு இருக்கும் பெண்களை நல்ல முறையில் பாராட்டிச் சீராட்டும் பக்குவம் பார்ப்பவர்களுக்கு இருக்கிறதா? அவர்களுடைய எண்ணமும் இதயமும் எந்த உணர்வு களுக்கோ அல்லவா அவர்களைக் கொண்டு செல்கிறது!

பாரதி விரும்பிய புதுமைப் பெண்களாக இன்றையப் பெண்கள் இருக்கின்றார்களா? இருக்கத்தான் விடுவார்களா? நாகரிகம் என்னும் பெயரால் ஆடை அலங்காரத்திலும் அடக்கத்திலும் கண்ணியமற்ற முறையில் பெண்கள் நடமாடினால் ஆண்களைக் குறைகூறி என்ன பயன்?

"தனியொரு வனுக் குணவில்லை யெனில்
ஜகத்தினை அழித்திடு வோம்"

மக்கள் நிறைவோடு வாழவேண்டும்; அப்படி வாழ வகையில்லையெனில் இந்த ஜெகத்தையே அழித்திடுவோம் என்று சொல்லுமளவுக்கு பாரதிக்கு ஆத்திரம் இருந்தது. ஒரு சிலர் உண்டு கொழுக்கவும் பலர் பசியால் வாடுவதையும் கண்ட பாரதி உள்ளம் கொதித்துப் பாடிய வரிகள் கொடுமையைச் சுட்ட கடுமையான தொடர்தான். அந்தநிலை நடக்கக்கூடிய தில்லைதான்! வறுமைநிலை மாறவேண்டும் என்பதிலே அழுத்தமான குறிக்கோள். இன்றைய நிலையைப் பார்த்தால் ஈரேழு பதினன்கு உலகங்களையும் (இருப்பதாகச் சொல்லப்படுவது) அழித்தாலும் காணுதே!

"எல்லாரும் ஓர்குலம் எல்லாரும் ஓரினம்
எல்லாரும் இந்திய மக்கள்
எல்லாரும் ஓர்நிறை எல்லாரும் ஓர்விலை
எல்லாரும் இந்நாட்டு மன்னர்"

அடாடா! இப்படிச் சொல்பவன் இன்றையக் கண்ணோட்டத்தில் கிறுக்கன். அவன் பாடிய பாடல்கள் உளறுமொழி என்றுதானே பெரும்பாலானோர் சொல்ல முற்படுவோம்!

"சாதிப் பிரிவுகள் சொல்லி — அதில்
தாழ்வென்றும் மேலென்றும் கொள்வார்
நீதிப் பிரிவுகள் செய்வார்—அங்கு
நித்தமும் சண்டைகள் செய்வார்
சாதிக் கொடுமைகள் வேண்டாம்—அன்பு
தன்னில் செழித்திடும் வையம்"

சாதிப் பிரிவுகள் ஒழிந்தனவா? எப்படி ஒழியும்? "சாதிகள் இல்லையடி பாப்பா!" என்றார். சாதிகள் இருக்கின்றன. அவை ஒழிந்துவிடக்கூடாது என்பதில் அரசியல்வாதிகள் எவ்வளவு அக்கறை காட்டுகிறார்கள். தேர்தல் வந்துவிட்டால் சாதிவெறி எந்த அளவுக்கு முகிழ்க்கிறது என்பதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

அரசு சாதி மறைந்து விடக்கூடாது என்பதிலே கண்ணும் கருத்துமாக இருப்பதினாலே தானே அரசாங்கப் புள்ளிவிவரங்களில் வேலை வாய்ப்புகளில் 'சாதி' கேட்பது தொடர்கின்றது. பிற்பட்ட சமூகம்; முற்பட்ட சமூகம்; முற்பட்டதில் பிற்பட்ட சமூகம் என்னும் பிரிவுகளை நிலைநிறுத்த அரசின் சட்ட விதிமுறைகள் இருக்கும் வரை சாதி ஒழியுமா? 'ஒற்றுமை உணர்வு ஒன்றி வாழ்தல்' என்பது நடைமுறைக்கு வருமா? ஒருக்காலும் இல்லை!

"தெய்வம் பலபல சொல்லிப் பகைத்
தீயை வளர்ப்பவர் மூடர்;
உய்வ தனைத்திலும் ஒன்றாய்—எங்கும்
ஓர்பொரு ளானது தெய்வம்
தீயினைக் கும்பிடும் பார்ப்பார்—நித்தம்
திக்கை வணங்கும் துருக்கர்;
கோயிற் சிலுவையின் முன்னே—நின்று
கும்பிடும் யேசு மதத்தார்;
யாரும் பணிந்திடும் தெய்வம்—பொருள்
யாவினும் நின்றிடும் தெய்வம்
பாருக்குள்ளே தெய்வம் ஒன்று; இதில்
பற்பல சண்டைகள் வேண்டாம்."

"அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்த" தெய்வம் ஒன்று இதிலே பற்பல சண்டைகள் ஏன் பாரதி கேட்டார். வழிபாடு மக்கள் விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்பத் தானே கைக்கொள்வது இதிலே மற்றவர் வீணாகத் தலையிடுவதும் பொங்கி எழுவதும் ஏன்? மதமாற்றம் காலங் காலமாக நடந்து வந்துள்ளது இந்தியாவில் ஏற்றாலும் ஏற்கா விட்டாலும் வழிபட்டுவந்த மதம் இந்து மதம்தான்! ஏனையவை இந்தியாவில் இறக்குமதி செய்யப் பட்டவையே! வந்தவர்களின் வாய்ச் சாதுரியத் திற்கும் மயங்கிய வாழ்க்கை வசதிக்கும் தமை மறந்து மதம் மாறியோர் எந்தக் காலத்திலும் இருந்தே வந்திருக்கிறார்கள். அப்போதெல்லாம் பொங்கி எழாதவர்கள் இன்று மதமாற்றத்தை அரசியலாக்கிக்கொண்டு ஒன்றுமில்லாததைப்பெரிது படுத்தி 'சும்மா' இருப்பவர்களும் அதையே காரணமாக்கி இந்துக்களையும் ஏன் அரசையுமே பயமுறுத்தும் நிலையை உருவாக்கிய பரிதாபத்தைப் பார்க்கிறோமே!

ஒன்றைமட்டும் சிந்தித்துப் பார்க்கவேண்டியது மிக அவசியம் தாழ்த்தப்பட்ட மக்கள்-அரிசனங்கள் சுதந்திரம் பெற்றபின் நடந்து கொண்ட—கொள்கிற செயல்களை எண்ணிப் பார்த்தால் அவர்கள் ஒவ்வொரு நிலையிலும் தங்களுடைய வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக்கொள்ள அடிக்கடி கட்சி மாறுவது என்பது புலனாகும்.

காங்கிரஸ் – குறிப்பாகத் தேசப்பிதா காந்தி அடிகள் – அவர்களுக்காக குரல் எழுப்பியபோது காங்கிரஸை ஆதரித்தார்கள். அக்கட்சியில் சில சலுகைகளைப் பெற்றனர். பின்பு பகுத்தறிவுத் தந்தை பெரியாரைப் பின்பற்றுவதாகச் சொல்லி அவர் வழிவந்த திராவிட முன்னேற்றக் கழகத்தை ஆதரித்து அரசாங்க சலுகைகளைப் பெருக்கினர். அதன்பின் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தை ஆதரித்து இன்னும் பல சலுகைகளைப் பெற்றனர். அதற்குமேல் இப்போது மத மாற்றத்தைச் சாக்காக்கி இன்னும் சில சலுகைகளுக்கும் அரசின் ஆதரவிற்கும் வழி செய்யப் பார்க்கின்றனர் அதுதான் காரணமே தவிர மதத்தின்மேல் பற்றுமிகுந்து மாற்றம் மேற் கொள்ளவில்லை. அதற்காக மேல் சாதியினர் தங்களைக் கொடுமைப்படுத்துகிறார்கள் - அமைதியாக வாழ வழியில்லை சமுதாய சமத்துவத்திற்காகப் பிறமதம் தழுவுகிறோம் என்பதாக ஒரு தோற்றத்தை உருவாக்கி ஆதாயம் தேட முற்படு கிறார்கள் இதை எப்போதும்போல் கண்டு கொள்ளாமல் விட்டிருந்தால் தானாக ஒழிந்திருக்கும் அரசியல் வாதிகள் வாய்ப்பை நழுவவிடக்கூடாது என்பதற்காக வரிந்து கட்டிக்கொண்டு வக்காலத்து வாங்கவும், மதத் தலைவர்கள் மதத்தைக் காக்கவும் மனமாற்றத்தைப் போக்கவும் 'சமுதாய சமத்துவத்திற்கு' வழி செய்வதாகவும் சொல்லிக்கொண்டு

அவர்களை நாடியும் அவர்களது தீய எண்ணத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் தர முற்பட்டிருப்பது நல்ல வழியில்லை. இதைத்தான் அவர்கள் எதிர்பார்க்கிருர்கள். இதன்மூலம் சலுகைகளைப் பெறமுடியும் என நம்புகிருர்கள். எனவே பாரதி கவிதை சொல்வதைக் கருத்தில் கொண்டு நடந்துகொள்ள வேண்டும்.

பாரதி பாடல்களைப் படைக்கும்போதே பிற்காலம் எப்படி அமையும்; நம் மக்கள் எப்படிப் பட்டவர்கள் என்பதைப் புரிந்தே வைத்திருந்தார். எனவேதான்

"நெஞ்சு பொறுக்கு தில்லையே இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்து விட்டால்
கொஞ்சமோ பிரிவினைகள்—ஒரு
கோடி என்ருல் அது பெரிதாமோ?"

என்று கலங்கினர்.

"பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய்
மெல்லப் போனது வே!"
"வாழ்வு முற்றும் கனவெனக் கூறிய
மறைவ லோர்தம் உரைபிழை யன்றுகாண்;
தாழ்வு பெற்ற புவித்தலக் கோலங்கள்
சரத மன்றெனல் யானும் அறிகுவேன்;
பாழ்க டந்த பரநிலை யென்றவர்
பகரும் அந்நிலை பார்த்திலன் பாரிசை;
ஊழ்க டந்து வருவதும் ஒன்றுண்டோ?
உண்மை தன்னிலோர் பாதி யுணர்ந்திட்டேன்
மாயை பொய்யெனல் முற்றிலும் கண்டனன்"

என மனம் வெதும்பினர்.

பாரதி தீர்க்கதரிசி! நடந்ததைச் சொன்னர்; நடப்பதைச் சொன்னர்; எப்படி நடக்கவேண்டும் என்னும் தன் கனவைச் சொன்னர்; ஆனல் எப்படி இருக்கும் என்பதையும் முன்னுணர்ந்து சொன்னர்.

பாரதியின் கனவு நனவாக வேண்டும். அது என்று நிறைவேறுகிறதோ அன்றுதான் நமக்கு நம் நாட்டிற்கு விடிவுகாலம். அதற்கு அவரது பாடல்கள் அருந்துணை பெருந்துணையாக விளங்கும்.

இறுதியாகப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசனின் பாடலை நினைவுகூர்ந்து கட்டுரையை முடிக்கிறேன்.

"பைந்தமிழ் தேர்ப்பாகன்! அவனொரு
செந்தமிழ்த் தேனீ! சிந்துக்குத் தந்தை!
குவிக்கும் கவிதைக் குயில்! இந் நாட்டினை
கவிழ்க்கும் பகையைக் கவிழ்க்கும் முரசு!
நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலா!
காடு கமழும் கற்பூரச் சொற்கோ
திறம்பாட வந்த மறவன்! புதிய
அறம்பாட வந்த அறிஞன்!"

# பிசாசுகள் உறங்குவதில்லை

— 'பரதேசி' —

பேய், பிசாசு இவைகளை நம்புகிறீர்களா? சரி; நம்பவில்லையா?–ரொம்பவும் நல்லது.

நான் ஒரு பிசாசு!

என்னை நீங்கள் கண்ணெதிரே காணலாம்! தூலவடிவில் ஐம்பத்தெட்டு முடிந்த 'பென்ஷன்' வாங்கும் அப்பாவியாகப் பகலில் தெரிவேன்.

இரவில் என்னைப்பற்றி கேளுங்கள்! என் மனைவி சொல்லுவாள்-''அது பிசாசு தானும் தூங்காது; பிறரையும் தூங்க விடாது!''

நான் யாருக்கும் எந்தத் தீங்கும் செய்வதில்லை - என் கையில் வாட்சு கிடையாது - அதைப் பிறருக்கு நான் தவணை முறைக்கட்டணத்தில் வாங்கிக் கொடுத்ததுண்டு-நான் வாங்கிக் கட்டிக் கொள்ளவில்லை - வாட்சை வாங்கிக் கையில் கட்டிக்கொள்வானேன்-போகிறவன் வருகிறவனுக்கெல்லாம் ''டைம்'' கீப்பாக இருந்து தொலைவானேன்?

அதுசரி - எங்கோ தடம்புரள்கிறேனே! நான் ஒரு பிசாசு!

நள்ளிரவில் நான் கண் விழித்தால் மணி 1–30. எனக்கு அலாரம் தேவை இல்லை. என் சிந்தனையினுள் அலாரம் இருக்கிறது – எழுந்திரு ..——தூங்கிப் பொழுதைப் போக்காதே! என்று அது என்னை எழுப்பிவிடுகிறது.

கீதாசாரியன் சொல்கிருர் ........— இருங்கள் .— கொஞ்சம் — ...— புரட்டிப் பார்த்துச் சொல்கிறேன் – மனப்பாடம் இல்லை புரட்டுகிறேன் – புரட்டுகிறேன் அரை மணியாகப் புரட்டுகிறேன் — — கீதையில் அந்தப் (பாழாய் போன) பொன்மொழி கிடைக்கவேயில்லை. கீதையில் இல்லாவிட்டால் என்ன? வேறு எங்கோ இருக்கிறது. கீதாசாரியன் சொல்லாவிட்டாலென்ன? யாரோ ஒரு மஹான் சொன்ன வாக்குதான் அது —

''முட்டாள்கள் தூங்கிக்கொண்டிருக்கும் போது ... அறிவாளி விழித்திருக்கிருன்''

மன்னிக்கணும் ஸார்! —

பரதேசி' விடுவது புருடா –

''யாநிசா சர்வபூதானும்
தஸ்யாம் ஜாகர்தி சம்யமீ
யஸ்யாம் ஜாக்ரதி பூதானி
ஸாநிசா பச்யதோ முநே''

—என்பது அர்த்தக் கீதை வாசகம் (கீதை–3–தபோ69)

உங்களைப்போய் தூங்குவதாகச் சொல்ல வரவில்லை. நான் விழித்துக் கொண்டிருப்பதைச் சொல்ல வந்தேன். பகலில் பள்ளிப் பிள்ளைகளின் நடுவே தூங்கி வழிந்தாலும் நான் நள்ளிரவில் கொட்டக் கொட்டக் கண் விழித்திருப்பது படுபயங்கர உண்மை-ஆமாம் கண் விழித்திருந்தால்தானே 'புரூப்' திருத்திக்கொடுக்கலாம். விடியற்காலை ஆசிரியர் திருலோக சீதாராம் வருவதற்குள் 6ஆம் பக்கம் 11ஆம் பக்கம்

மேட்டரை அடித்து வைக்கலாம்... எல்லாம் பழைய வாசனை 1952ம் வருடப் பழக்கம் ஐயா!

உங்களுக்குத் திருச்சியில் பழைய பஸ் ஸ்டாண்டு தெரியுமா? பட்டர் வொர்த் ரோட்டின் தொடக்கத்தில் அமாவாசி அய்யர் ஹோட்டல் கடைக்கு எதிரில் ஒரு சந்தில் 'அனுமான் பிரஸ்' இருந்ததே அதையாவது தெரியுமா? அந்தப் பிரஸ் உரிமையாளர் பெரம்பலூரில் சீனிவாசய்யர் "சந்திரா" என்றோ என்னவோ ஒரு பஸ் பெரம்பலூருக்கு அந்தக் காலத்தில் ஓட விட்டாரே! அதாவது தெரியுமா?

சரி .. கவிஞர் "சாலிவாஹனனை" தெரியுமா? ஒல்லியாக உசரமாக மெது வாகப் பேசுவாரே அவரோடுதானே ஸார் நான் சிவாஜியில் வேலை பார்த்தேன் அச்சுத் தொழிலாளரோடு நள்ளிரவில் கண் விழித்து அவர்களோடு டீயும் பன்னும் சாப்பிட்டு காலால் மிதிக்கும் மெஷினில் 'பிசாசு' வேகத்தைக் கொண்டுவந்து ஆபீசில் அச்சுக்கள் அடியிலேயே படுத்து அமாவாசி அய்யர் ஹோட்டலில் டிபன் காபி சாப்பிட்டு முழுச்சாப்பாடு சாப்பிட்டு வாரந்தோறும் 16 பக்கங்களில் இரண்டணா விலையில் "சிவாஜி" வார இதழை வெளியிடும் பெரும் புணியில் ஈடுபட்டிருந்த பிசாசு களின் குஞ்சு ஐயா நான்! பிசாசுக்குட்டி என்று அல்லது குட்டிப் பிசாசு என்று வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங் கள்! என்றால் 'சிவாஜியை' விட்டு விலகி 'ஹிந்தி' பிரசார மாணவனாக, ஹிந்தி ஆசிரியனாக மாற முடிந்தது.

என்னைப் பிடித்த நள்ளிரவு விழிப் புப் பிசாசிடமிருந்து இன்னும் விடுபட முடியவில்லை. யாருக்காவது நள்ளிரவுப் பிசாசு வேண்டுமா? உடனே எனக்கு எழுதுங்கள்!

---



## அருள் நிறை

**பல்லவி**

அருள் நிறை அம்மையே அகிலாண்ட நாயகியே
ஆதாரம் நீயே ஆதி பராசக்தியே (அருள்)

**அனுபல்லவி**

இருள் நீக்கும் ஒளியே இளவஞ்சிக்கொடியே
ஈச்வரன் நாயகியே ஈடில்லாத் தலைவியே (அருள்)

**1-ம், சரணம்**

உள்ளத் தொளிரும் உமா மகேஸ்வரியே
ஊழ்வினை யகற்றிவிடும் உத்தமதெய்வம் நீயே
எண்திசை வென்றிட்ட மதுரை மீனாட்சியே
ஏகாம்பரர் மகிழும் காஞ்சி காமாட்சியே (அருள்)

**2-ம், சரணம்**

ஐங்கரனைப் பெற்ற ஆனந்த ரூபிணியே
ஒப்பில்லா மணியே ஓம்சக்தி தாயே
ஓம்கார ரூபிணியே புவனேஸ்வரி மாயே
ஔவைக்கருள் செய்த ஆறுமுகன் அன்னையே (அருள்)

—'ராதிகா'

# காலவினை

[கவியோகி சுத்தானந்த பாரதியார்]

அநியாயக் காலவினை அலட்டுதே
அணுகுண்டுப் போர்வந்து மிரட்டுதே
மனிதாபி மானமெல்லாம் போச்சுதே
மனிதருக்கு மனிதர்பகை யாச்சுதே
சனிபோலே கட்சிச்சண்டை வலுக்குதே
சங்கடப் பேய்காசும் பணமும் குலுக்குதே
இனி என்ன செய்வேன் என்றே மக்களும்
ஏங்கி ஏங்கித் திகைக்கின்றார் திக்கெங்கும்
விலைவாசி நிலையின்றி ஏறுதே
விஞ்ஞானம் வெடிகுண்டாய் மாறுதே

அலைவீசி அரசியலும் குமுறுதே
அட்டகாச மேடை வீறிட்டலறுதே
அரிசிவிலை பருப்புவிலை ஆனைவிலையே
அலைந்தலைந்தும் நயச்சரக்குகள் அகப்படவில்லையே
சரிசமனாய் மண்ணைப் போட்டுச் சரக்கு விற்கிறான்
சண்டாளப்பாவி கள்ளச்சந்தைக் கடைவிரிக்கிறான்
பெரிய படிப்புக்காரனுக்குப் பிழைக்கத் தெரியலை
பேச்சு மேடைப் புலிகளுக்கிங் குழைக்கத் தெரியலை
அரியபெரிய கவிகளுக்கிங் காடத்தெரியலை
ஆளுக்கேற்ற அடதானம் போடத்தெரியலை
வாயாடிக்குப் பெரும்புகழும் வந்துமுண்டுது
வஞ்சமற்ற பாட்டாளிக்கு வயறுகிண்டுது
காயிதத்திலே சட்டதிட்டம் வட்டம் போடுது
காரியத்திலே வஞ்சலஞ்சம் திட்டம் போடுது
மனதைக் கெடுக்கும் மாயத்துக்கு மவுசுகூடுது
மானங்கெட்ட பகட்டைப் பார்க்க மனம் ஓடுது
கனத்தகுரலில் டப்பாப்பாட்டு காதைத்துளைக்குது
கதையைக்காணக் கதையைக்கான மதியைமயக்குது
அரசியலில் ஓட்டுவேட்டை ஆட்டம் போடுது
அள்ளிக் கொட்டும் கள்ளப்பணம் துள்ளியாடுது
வரிப்பணத்தைக் குண்டுப்புகை வாரிப்போகுது
வல்லரசு மல்லுக்கட்டிக் கொல்லத்தாவுது
மண்ணுலகில் மனிதராக நடக்கத்தெரியலை
வான்மதியில் நடப்பவரின் மனசு புரியலை
கண்ணுலகம் கடும்பசியால் கலங்கிவாடுது
கண்கெட்ட அரசியல்போர்க் களத்தை நாடுது
உலகமக்கள் ஒருகுலமாய் வந்துசேருங்கள்
ஓரேமாந்தர் கூட்டமாக வாழப்பாருங்கள்.

---

# உறுதி மொழி

திருச்சி பாரதன்

அன்பு என்னும் மலர்களை இந்த
உலகில் தூவிடுவோம்
ஆற்றல் என்னும் சக்தி கொண்ட
ஆக்கம் சேர்த்திடுவோம்!

இன்பம் என்னும் உணர்வால் நமது
இதயம் மகிழ்ந்திடுவோம்
ஈடிணையில்லா குணங்களி னாலே
இனிய சுவைபெறுவோம்:

உண்மை ஊக்கம் உழைப்பு கொண்ட
உயர்வு பெருக்கிடுவோம்
எண்ணம் தூயதாய் ஆக்கி அங்கே
இறைவனைப் புரிந்திடுவோம்!

# யார் பேசலாம்? எதைப் பேசலாம்?

அ. வெ. சுப்பிரமணியன்

தெருவில் நடந்த மோட்டார் விபத்தைப்பற்றி நாளேட்டில் வரும் செய்தி உணர்ச்சியின்றி நடந்ததை மட்டுமே கூறுவதாக அமைந்திருக்கும் விபத்தில் சிக்குண்டவர் மருத்துவ மனையில் படுக்கையில் கிடத்தப்பட்டவர் - அதே விபத்தைப்பற்றிப் பேசினல் நாளேட்டுச் செய்தியைப் போலவா பேசுவார்? உணர்ச்சி வசப்பட்டு மோட்டார் ஓட்டியை வெகுவாகத் தாக்கித் தப்பெல்லாம் அவனுடையதே என்று சாடுவார் அல்லவா? உணர்ச்சியே இலக்கிய அநுபவத்தின் உயிர்நிலை இதை உணர்ந்த தமிழன் அகப்பொருள் இலக்கியத்தில் கவிஞன் கூற்றே வரக்கூடாது என்று தடை செய்துவிட்டான் உலக மகாகவி என்று புகழ் பெற்ற T. S. எலியட்டும் இதையே வற்புறுத்துவார். † சங்ககாலக் காதற் கவிதையில் கவிஞன் பேசுவதாக ஒரு பாட்டையும் காண முடியாது. இந்த விதியை அத்தனை முக்கியமாகப் பின்பற்றி வந்தனர் பழந்தமிழர்

கவிஞன் தானே பேசாமல் ஏதோ ஒரு பாத்திரத்தைப் பேசவிடுவது என்பது கருத்தல்ல பேசும் பாத்திரம் பொருத்தமான பாத்திரமாக இருக்கவேண்டும் பரத்தையர் வீட்டிலேயே பழியாய்க் கிடந்த கணவன், தனக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்த செய்தி கேட்டு அதைக் காண விரைந்து வருகிறான். அவனை வீட்டுக்குள் வர மறுத்து விடுவாள் மனைவி என்றுதான் தோழியரும் மற்றோரும் கணவன் உள்ளிட்டாக—எதிர்பார்க்கிறார்கள் ஆனால் நடந்தது என்ன? கணவனின் நடத்தையால் மிகுதியும் அல்லற்பட்ட மனைவி அவனை வரவேற்று உபசரிக்கிறாள்! "உயர் குடியில் பிறப்பதனால் எத்தனை தொல்லை. உள்ளத்தின் உந்தலை அடக்கிப் பண்பாடு காட்டும் வழியிற் செல்ல நேர்கிறது, அல்லவா?" என்று வியந்து கூறும் சொற்களை யார் கூறுவது பொருந்தும்? தலைவன் சொல்லவே கூடாது; தலைவி கூறுவது தரக்குறைவு ஆகும். தோழி தான் இதைச் சொல்ல வேண்டும்: புலவரும் தோழியைத்தான் தேர்ந்தெடுக்கிறார். பாட்டை நுகருவோம், வாருங்கள்!

> காலை எழுந்து கடுந்தேர் பண்ணி
> வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற
> மல்லல் ஊரன் எல்லினன் பெரிதென்று
> மறுவரும் சிறுவன் தாயே.
> தெறுவதம்ம இக்குடிப் பிறத்தல்லே!

பல வீடுகளில் பெற்றோர் தம் மகளுக்கு ஏற்ற மணமகனைத் தேர்ந்தெடுக்கப் பெருமுயற்சி செய்வதை இக்காலத்தில் பார்க்கிறோம். அக்காலத்தில் தமிழ்நாட்டில் காதல் மணமே முறை என்பது சமூகத்தில் வேர் ஊன்றி இருந்த கருத்து. பெண் ஓர் இளைஞனைக் கண்டு காதல் கொள்கிறாள்: ஆனால், அவளுடைய பெற்றோர் யாதோ காரணத்தால் அவன் இவளை மணக்கக் கூடாது என்று முடிவு செய்து விடுகிறார்கள். இதன் பிறகு அவளால் அவனைப் பார்க்கவும் இயலாமல் போய் விடுகிறது. தன் வீட்டிலேயே பெண் சிறைப் படுத்தப்படுகிறாள். தன் காதலனைக் காணவிட்டால் உள்ளம் வெதும்பி உடல் இளைக்கத் தான் இறந்து விடுவோம் என்று பெண் நினைப்பதாகப் பல பாடல்கள் பாடப்பட்டுள்ளன. நெய்தல் நிலத்துப் பெண் கடற்கரையில் நாளும் காண்கின்ற ஒரு காட்சியையே உவமையாக வைத்து,

> யாஅம் எம் காதலர்க் காணேமாயின்
> கல் பொரு சிறு நுரை போல
> மெல்ல மெல்ல இல்லாகுதுமே —

† "The poet should say very little in propria persona, for he is no imitator when doing that." — T. S Eliot - Selected Essays.

என்று துயரத்தின் எல்லை நிலத்தில் இருந்து பாடுவாள். தமிழ் அகப்பொருள் இலக்கியத்தில் கைகூடாத அன்பைக் குறித்துப் புலவோர் பாடுவதில்லை; அத்தகைய பாட்டு ஆன்றோரால் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. ஆகவே இத் தலைவியின் காதல் நிறைவேறும், திருமணம் நடப்பது உறுதி என்பது படிப்போர்க்கு நன்றாகத் தெரிந்ததே. இந்நிலையில் ''மெல்ல மெல்ல இல்லாகுதுமே'' என்ற புலம்பல் தலைவியின் உள்ளப் பாங்கைக் காட்டுவதே அன்றி உண்மையன்று: இச்சொற்களைத் தலைவி கூறினால் சாலப் பொருந்துவதாகும். அவை அவளுடைய உணர்ச்சி நிலையைப் படம் பிடித்துக் காட்டுவன என்று படிப்போர் தெரிந்து கொள்வார்கள் மற்றவர்கள் இதைக் கூறினால் இது மெய்யாக நடந்துவிடுமோ என்ற ஐயம் தோன்றும்: கலையின் நோக்கம் ஈடேறாது. தலைவி ''இறந்து போய் விடுவேன்'' என்றும் ''இப்பிறவியில் கைகூடாத அன்பு அடுத்த பிறவியிலாவது நிறைவேறட்டும்!'' என்றும் பாடிப்புலம்புவதெல்லாம் தலைவி கூற்றாக வருவதால் அது கலையாகின்றது.

யார் எதனைச் சொல்லுகிறார் என்பது இலக்கியக்கலையின் இதயம் ஆகின்றது. இதனை நன்கறிந்து சூத்திரம் இயற்றி வழிவகுத்த இலக்கண ஆசிரியர்களையும், கூற்றினை மிக்க அழகாகப் பயன்படுத்திக் கவிதை பாடிய சங்கப் புலவோரையும் நன்றிப் பெருக்கோடு வழிபடுதல் இலக்கிய அன்பர்களுக்குக் கடனாக அமைகின்றது.



# பகவான்

# ஸ்ரீ ஸத்ய ஸாயி பாபா

# கவிஞரின் நோக்கு



டி. ஏ. கிருஷ்ணமூர்த்தி

மிகச் சாமான்யனாய்த் தோன்றி அதிமானுட ராக வளர்ந்து விளங்கி அமரராகிஇருக்கும் கவிஞர் திருலோக சீதாராம் அவர்களுடன் நட்புரிமை பாராட்டும் நண்பர்கள் பலர் நாடு பூராவும் விரவிக்கிடக்கும் இந்த நண்பர்கள் பலரிடமும் கவிஞருடைய எழுத்துக்கள் இருக்கக்கூடும். அவற்றை எல்லாம் தொகுத்து வெளியிட்டால் கவிஞருடைய சிந்தனையாற்றல், இலக்கிய இதிகாச புராணங்களில் அவருடைய ஆழ்ந்த தெளிந்த ஞானம் படைப்பின் ரகசியங்கள் ஊடுருவி பார்க்கும் அபூர்வ திருஷ்டி இவை யனைத்தும் புலனாகும். உலகின் ஒப்பற்ற சிந்தனை யாளர்களின் வரிசையில் நமது கவிஞருக்கும் இடம் இருக்கிறது என்பது யாவரும் ஒப்புக் கொள்ளவும் கூடும்.

கடந்த சில ஆண்டுகளாக அவர் நோய் வாய்ப்பட்டு தேக வலிமை குன்றியபோது அவரி டம் ஆழ்ந்த பற்றுதல் கொண்ட எனக்கு ஓர் எண்ணம் தோன்றியது ஞானக்களஞ்சியமாக வும், மானிடரின் இடர் தீர்க்கும் தெய்வீக வைத்தியநாதனாகவும் விளங்கிவரும் பகவான் ஸ்ரீ சத்யசாயிபாபா அவர்களின் திருவருள் கவிஞருக்கு கிடைக்க வேண்டுமென்று மிகவும் விரும்பினேன் கவிஞரை சந்திக்கும் போதெல் லாம் நம் நாட்டின் தலைசிறந்த பேராசிரியர்கள், விஞ்ஞானிகள், மருத்துவ துறையில் வல்லுநர் கள் போன்ற பலரின் வழிபாட்டு தெய்வமாக பாபா கொண்டாடப்பட்டு வரும் உண்மை யைக்கூறி அதற்குத்தக்கசான்றுகளையும் எடுத்துக் காட்டி பாபாவிடம் எனக்கிருந்த ஈடுபாடும் அதன் பயனாக நான் அனுபவித்து வரும் இனியவை அனைத்தும் கவிஞரிடம் தெரிவித்துக் கொள்வதுஉண்டு. ஆனால் கவிஞரோ நான் கூறு வதையெல்லாம் கவனத்துடன் தனக்கே இயல் பான குமிண் சிரிப்புடன் கேட்டுக் கொள்வாரே யன்றி, அவரது உள்ளக்கிடக்கை என்னவென்று புலப்படுத்தியதாக நினைவில்லை.

உபநிடதங்கள் போன்ற உயர்ந்த கருத்துக் கள் தோன்றும் ஆற்றல்மிக்க கவிஞரின் மேதா விலாசம் பாபாவின் அருட் கவனத்திற்குள் வந்து, அண்ணாருடைய அருளாசியுடன் அருட்கரத் தினின்று ஊறும் அமுத விபூதியை கவிஞர் பெற்று அவர் உடலை பற்றிய வேதனை நீங்க வேண்டுமென்பது என் பேரவா. அத்துடன் பாபாவின் அருமை பெருமைகளை தமிழ்கூறு நல்லுலகம் தோறும் கவிஞர் முழக்க வேண்டும் என்று விரும்பினேன்.

அமெரிக்காவின் பிரபல திரையுலக எழுத் தாளர் ஆர்னல்டு ஷீல்மன் எழுதியுள்ள பாபா என்ற நூலைப்பற்றிய விமர்சனம் ஒன்றை கவிஞரின்கவனத்திற்கு கொண்டு வந்தேன். என் விருப்பத்திற்கு இணங்கி கவிஞர் தன் கருத்துக் களை தனது 'இலக்கியப்படகு' கட்டுரையில் எழுதியிருந்தது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம்.

அதில் கூறுகிறார்:

"புட்டபர்த்தி சாயிபாபாவைப்பற்றி அமெரிக்க சஞ்சிகையொன்றின் கட்டுரைப் பகுதியை நகல் எடுத்து எனக்கு அனுப்பியிருக் கிறார் ஒலவக்கோடு கிருஷ்ணமூர்த்தி. என் கருத்தையும் அறிய விரும்புகிறார்.

ஆர்னுல்டு ஷீல்மன் என்ற பிரசித்திப்பெற்ற ஹாலிவுட் திரைப்பட நாடக ஆசிரியராக விளங்கும் எழுத்தாளர் ஒருவர் எழுதிய குறிப்புக்கள் அதில் உள்ளன.

பாபாவை ஒரு முறை நேரில் சந்தித்த இவ்வெழுத்தாளர் அவரை அணுகிப் பழகியும், அருகிருந்து செய்திகளை உணர்ந்தும் தெரிந்து கொண்ட தகவல்களை இக்குறிப்பில் தந்திருக்கிருர்.

பாபா பல்லாயிரக்கணக்கான மக்களின் ஆறுதலாகவும், அவர்களின் குறைகளையும், உடலில் உள்ள நோவுகளைப்போக்கும் அருமருநதாகவும் விளங்கும் உண்மையை அமெரிக்க வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளும் இக்குறிப்பில், பாபாவின் அருமை பெருமைகளைப் பலபட வியந்து கூறப்பட்டுள்ளது

இவ்வெழுத்தாளர் பாபாவின் சீடர் அல்லர் என்றும் சமகாலத்தவராக விளங்கும் ஒருவரை அபூர்வ மனிதராகவும் தெய்வீக சக்தி நிறைந்தவராகவும் உறுத்துப் பார்க்கவோ உல்லங்கனம் செய்யவோ தகாதவராகவும் உள்ள ஒருவர் என்று பாபாவை அவர் அறிமுகப்படுத்துகிருர் என்று சஞ்சிகையின் குறிப்பு பேசுகிறது.

அபூர்வ பிறவிகள் பலவகையுண்டு கழைக்கூத்தாடி, மந்தரஜாலம் புரிபவன், கணித மேதை, அருமையான கவிதைகள் எழுதுபவன், சொற்சிலம்பம் வல்ல பேச்சாளி, பெரும்பாலான மக்களின் வாக்குகளைப் பெறுகின்ற பதவியாளன் இப்படி ஒவ்வொரு துறையிலும் சராசரி மக்களின் சாமர்த்தியத்தை விஞ்சிய ஆற்றல் பெற்றவர்கள் மக்களின் வியப்புக்குப் பாத்திரமாகவே விளங்குவர்.

மகாத்மா காந்தியடிகள், பரமஹம்சர், விவேகானந்தர், ரமண மகரிஷி, பகவான் அரவிந்தர், கவி ரவிந்திரநாதர், பாரதி போன்றவர்களெல்லாம் நம்மிடையே பிறந்த மனிதர்கள் தாம். அவர்களுக்கும் பசி, தாகம் நோய், இறுதியில் மரணம் என்ற எவ்வித சரீர உபாதைகளும் விலக்கில்லை ஆனல் ஜீவன் முக்தர்களாக விளங்குபவர்களை அவர்களது உடல், பெயர், உலகியல் அந்தஸ்து இவைகளைக்கொண்டு நாம் புரிந்துகொள்ள முடியாது. உலகில் எத்தகைய வியக்தியும் மண்ணில் சில காலம் இருந்து விளையாடிப்பின் யதாஸ்தானம் சென்றடையத் தக்க பிறவியையே எடுக்கின்றன.

உடல் வாழ்வில் எல்லா ஜீவர்களுக்கும் பொதுவான அளவுகோல் காலம்தான். ஆயினும் காலவரம்புக்குட்பட்ட ஒரு பிறவியில் வரப்பிழந்த உன்னத சக்திகளை வரப்பிரசாதமாகப் பெற்று சராசரிக்கும் அதற்கும் கீழாகவும் உள்ள ஆன்ம கோடிகளுக்கும் ஒரு ஆறுதலாகவும் ஆதர்சமாகவும் விளங்குகின்ற பேறுயாரோ சிலருக்குத்தான் கிடைக்கின்றன. பாபாவுக்கும் கிடைத்திருக்கிறது.

கடவுள் இருக்கிருரா, இல்லையா என்ற விவகாரம், இரணியன் ஆட்சி காலத்திலிருந்து இராமசாமி பெரியார் காலத்தையும் தாண்டிய ஒரு விவகாரமாகவே இருந்து வருகிறது; இருந்து வரும். அதனுல் கடவுள் சற்றும் பாதிக்கப்படமாட்டார். பாபாவின் அற்புத செயல்களை ஜாலவித்தைகள் என்ரே, அஷ்டமாசித்திகளில் ஒருவகையென்ரே விவரிப்பவர்களும் இருக்கலாம். அப்படியும் கூட அது எளிதானதன்று. சாக்ஷாத் தெய்வீகமென்று வழிபடுகிறவர்கள், பயன் பெறுகிறவர்களின் எண்ணிக்கை கொஞ்சம் எனறு கூற முடியாது.

எண்ணற்ற ஆன்மாக்களுக்கு அன்பு செலுத்தவும் பக்தி செலுத்தவும் தகுந்த அபூர்வ வியக்தியாக பாபா விளங்குகிருர் என்ற உண்மையை மறுப்பதால் யாருக்கு என்ன லாபம்? எந்த மகானையும் மறுபேச்சு இலலாமல் எந்த யுகத்திலும் மனிதர்கள் ஏற்றுக்கொண்டது கிடையாது. இயேசு, காந்தியடிகள் போன்றவர்கள் இதற்குச் சான்று

ஆனல் ஒன்று, மகான்கள் அதிசயப் பிறவிகள் எத்தனைபேர் வந்தாலும் தான் இந்த மண்ணில் என்ன மாறுதல் ஏற்பட்டுவிட்டது? வரம் மிகுந்த சக்திகளின்பால் வியப்பும் பணிவும் பக்தி

கார்ட்டூனிஸ்ட் :————:————




ஏ. ஆர். ராஜாமணி



திரு. சங்கர்

பாரதம் விடுதலை அடைந்த காலகட்டத்தில் புது தில்லியிலிருந்து வெளி வரத் தொடங்கிய ஒரு வார இதழ், மிகுந்த பரபரப்புடன் கவனம் பெறத் தவறவில்லை-அரசியல் பிரமுகர்கள் வட்டாரத்தில்! கார்ட்டூன்களினாலும், கட்டுரைகளினாலும் 26 ஆண்டு காலம், தொடர்ந்து இந்திய அரசியல் வாதிகளைப் புடம் போட்ட சஞ்சிகை அது! நாட்டின் முதல் பிரதமரான நேருஜி, இதைப் பெரிதும் வரவேற்றார்! அதேசமயம், அந்த வார ஏட்டின் கூரிய, தீவிரத் தூரிகையின் விமர்சனத்திற்கும் அஞ்சினார்! அப்போதெல்லாம் இப்போது உள்ள மாதிரி, தனக்குப் பிடிக்காத பத்திரிகையாளர்களைக் கருவறுக்காமல், அவர்களைப் பாராட்டி, சுட்டிக் காட்டப்படும் குறைகளை ஆட்சியிலுள்ளப் பெருந்தலைவர்கள் அகற்றிக் கொள்ளப்பாடுபட்ட, "உண்மையான" ஜனநாயகம் நிலவிய காலம்! எனவே, பண்பிற்கும், உயரிய ராஜதந்திர முதிர்ச்சிக்கும் பெயர் பெற்ற நேருஜி இந்த சஞ்சிகையில், இதழ் தவறாமல் தனது அரசின் நிர்வாக முறை தொடர்பான கார்ட்டூன்களை, எவ்வளவோ பெரும் பொறுப்புகளுக்கு இடையேயும் உன்னிப்பாகக் கவனித்து வந்ததுடன், எதற்கும் அஞ்சாமல் உங்கள் பணி இதே போல் எப்போதும் தொடரட்டும் எனவும் ஊக்கமளித்தார். நேருஜியின் இத்தகையப் பேரன்பிற்குப் பாத்திரமானவர் தான், பிற்காலத்தில், அரசியல் சூழ்நிலைகளின் அருவருக்கத்தக்கப் போக்கினால் வெறுப்புற்று, ஒரு வெள்ளி விழா காலத்திற்கும் அதிகமாகவே, இந்திய அரசியல் களத்தைத் தூய்மைப்படுத்த உதவி வந்த தனது 'சக்தி வாய்ந்த' தூரிகையைத் தூக்கியெறிந்தார்!

**அவர் தான்,**
**சர்வதேசப் புகழ் பெற்ற,**
**பிரபல கார்ட்டூனிஸ்ட்டான**
**திரு. கே. சங்கர் பிள்ளை அவர்கள்!**

அவரது "சங்கர்ஸ்வீக்லியை அறியாதவர்கள்," ஹிந்து' ஆங்கில நாளிதழையே அறியாதவர்களுக்குச் சமம்! திருவனந்தபுரத்தில் சட்டப் படிப்பை பாதியில் நிறுத்திக்கொண்டு, தில்லிக்கு குடியேறி ஹிந்துஸ்தான் டைம்ஸில் கார்ட்டூனிஸ்ட்டாக இணைந்தார் திரு. சங்கர். 1935லிருந்து ஒரு மாமாங்க காலம். அவரது தூரிகையில் வெளிப்பட்ட மிக நுட்பமான அழுத்தமும், ஆழமும் கொண்ட நகைச்சுவைக் கார்ட்டூன்களை ஹிந்துஸ்தான் டைம்ஸில் கண்டு ஆங்கிலேய வர்க்கம், குறிப்பாக வைஸ்ராய்கள் பலரும் வியந்து மகிழ்ந்து பாராட்டியதுண்டு. 1947-ன் துவக்கத்தில் திரு. சங்கர் சுயமாக 'இண்டியன் கிரானிகல்' என்ற செய்தி ஏட்டைத் துவங்கினார். ஓராண்டு காலத்திற்குள்ளாக இதை தொழிலதிபர் திரு. ராம்நாத் கோயங்கா, வாங்கிக் கொண்டார். அவருக்கே உரிய முறையில், பத்திரிகையின் பெயரையும் மாற்றினார்! அது தான் தற்போதைய INDIAN EXPRESS!

'சங்கர்ஸ் வீக்லியைத் துவங்கியதும், பல நாடுகளுக்கு விஜயம் செய்தார் சங்கர். நேருஜியுடன் சென்றது தான் அதிகம். ஹங்கேரியத் தூதர் ஒருவர் 1955ல் சங்கருக்கு ஒரு அழகான 'ஹங்கேரியப் பொம்மை''யைப் பரிசளித்தார். இதன் அழகில் சொக்கிய சங்கர், தொடர்ந்து வெளி நாட்டுப் பொம்மைகளைச் சேகரிக்கும் பித்துக்கொண்டவரானர். இதன் விளைவு, வீட்டில் ஆயிரம் அழகழகான அந்நிய நாட்டுப் பொம்மைகள்! நேருஜி இவற்றைப் பாதுகாக்கும் வழியைச் சொன்னர் இன்று தில்லியில் Pressarla எனப்படும் பகதூர்ஷா ஜாபர் மார்க்கில் அமைந்துள்ள பிரம்மாண்டமான Nehru House'சின் ஒரு பகுதியாக விளங்கும் 'சர்வதேச பொம்மை மாளிகை'' தோன்றிய கதை இதுதான்! சிறுவர்களுக்கானப் புத்தகப் பதிப்பாக(CBT)மும் பெரிய அளவில் இங்குஇயங்குகிறது ஆயிரத்திற்கு மேற்பட்ட ஊழியர்கள் பணியாற்றும் பெரிய நிறுவனமாக, மேலும் வளர்ச்சி பெற்று வரும் ஸ்தாபனத்தின் தலைவராக, தந்தையாக, பெயரும் புகழும் பெற்ற திரு, சங்கர்பிள்ளை அவர்களுக்கு 31—7—81ல் எண்பது வயது நிறைகிறது உழைப்பால் உயர்ந்தவர் அவர்! ஆயுளைப் பெருக்கிக் கொள்வதிலும் அவர் வெற்றி க ண வாழ்த்துவோம்!



# “களிறும் புள்ளும்”

[ தஞ்சை ஆத்மநாதன் ]

தஞ்சை மேல நெடுந்தெருவிலுள்ள கொங்கணேஸ்வர வித்யாசாலாவின் தலைமை ஆசிரியர் சிரஞ்சீவி ஜானகிராமனுக்கு, எனது மனமுவந்த நன்றி.

அறுபத்தொன்பது வயதான நான், நோய் கொண்ட உடல், நொந்த உள்ளம், நீங்கா நிழல் போலத்தொடரும் நல்குரவு ஆகியவற்றிற்குச் சொந்தக்காரன்.

சில நாட்களுக்கு முன் சேக்கிழார் அடிப்பொடியின் (சே, அ) ஆங்கிலத்தில் எழுதியுள்ள ''விநாயகர் நான்மணிமாலை'' யையும் ''குயில் பாட்டை''யும் (களிறும் புள்ளும்), இவற்றினுக்குக் கவிக் குயில் பாரதியின் தமிழ் மொழிபெயர்ப்பையும், நண்பர் ஜானகிராமன் என்னிடம் கொடுத்தார்

ஆங்கில மூலம், தமிழ் மொழி பெயர்ப்பு என்று துணிந்து சொல்லுகிறேன். மூலத்தை வழங்கியவர் சே.அ தமிழாக்கம் பாரதியுடையது.

ஸ்ரீராமனைப் பார்த்து உன் நாமம் உன் ரூபத்திற்கு மங்களம் என்று சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவராகிய சத்குரு த்யாகபிரம்மத்திற்கு வாழ்த்த உரிமையுண்டு.

ஆழ்வார் ஒருவர் ''மல்லாண்ட திண்தோள் மணிவண்ணனுக்கு''ப் பல்லாண்டு பாடலாம்.

''ஆறிருதடந்தோள் வாழ்க! ஆறுமுகம் வாழ்க'' என நல்லாசிகளை ஒரு அன்பர் வீசுகிறார்.

தென்னிலங்கைக் கோன் முடிகள் சிந்துவித்த விஜயராகவனை, தங்கு பெரும் புகழ் ஜனகன் திருமருகனாகிய சீதாராமனை, திண்டிறளாள் தாடகைதன் உறம் உருவச் சிலைவளைத்த கோதண்ட ராமனை தன் எழுத்துத் திறத்தால், கவிதை நயத்துடன், மிகச் சிறிய கைக்குழந்தையாக்கி, தொட்டிலிட்டுத் தாலாட்ட, குலசேகரருக்குத்'தைரியம்' இருந்ததென்றால், சே. அ. யின் ஆங்கிலமே மூலம் தமிழ் மொழியில் உள்ளவை மொழி பெயர்ப்பு என அடித்துச் சொல்ல எனக்குச் சகல உரிமைகளும் உண்டு, உண்டு.

ஒரே மூச்சில், பொட்டைக் கண்களைச் சுருக்கிக் கொண்டு சே. அ யின் ஒச்ச மற்ற நல்முத்துக்கள் இரண்டையும் ருசித்தேன்; ரசித்தேன்.

தன்னுடைய பாட்டுக்கள் சிலவற்றைப் பாரதியே மொழி பெயர்த்திருக்கிறார் உதாரணமாக.

கும்மியடி தமிழ் நாடு முழுதுங்
குலுங்கிடக் கைகொட்டிக் கும்மியடி
நம்மைப் பிடித்த பிசாசுகள் போயின
நன்மை கண்டோ மென்று கும்மியடி

என்ற வரிகளை.

Dance the Kummi, beat the measure;
Let this land of the Tamils ring with our dance
For now we are rid of all evil shades;
We' ve seen the good என்று மொழி பெயர்த்திருக்கிறார்.

திரு. P. N. அப்புசாமி அவர்களோ

வெள்ளிப் பனிமலையின் மீதுலவுவோம்; அடி,
மேலைக் கடல் முழுதுங் கப்பல் விடுவோம்,
பள்ளித்தல மனைத்துங் கோயில் செய்குவோம்; எங்கள்
பாரத தேசமென்று தோள் கொட்டுவோம்

என்பதற்கு

''We'll stroll at ease upon the tops of silve rpeaks of snow;
And boldly sail our ships across the western seas below;
Of every inch of all ours schools we'll sacred temples make;
This Bharat land is ours ever!' Who dare our challenge take? எனக் கூறுகிறார்.

அன்றியும்

வெடிபடு மண்டத்திடி பல தாளம் போட —
வெறும்
வெளியி லிரத்தக் களியொடு பூதம்பாட .......
அன்னை, அன்னை
ஆடுங் கூத்தை நாடிச் செய்தாய் என்னை
என்ற
"ஊழிக் கூத்து'ச் "சப்த ஜாலத்தை" Parody
செய்வதாக நினைத்துக்கொண்டு
"அடிசுட. வெயில்காய் ஆங்கே அருகில்
அழுக்கின் நுரையொடு கூவம் பாய

x x x

சென்னை, சென்னை, சேரும் புழுதியில் நாடச் செய்தாய் என்னை" என வாந்தியெடுத்ததும் எனது நினைவிற்கு வருகிறது.

"மதியினைச் சுண்ணம் செய்து, வானவில் வர்ணந்தீட்டி, கதிர், மதி விளக்கந் தூக்கிக் ககன மீன் சரத்திற் கோத்துப் புதிய மின் சிகரம் கொண்ட "The Song of the Kuyil" என்ற பெயர்ப் பலகையைத் தாங்கி நின்ற மகோன்னத மாளிகைக்குள் நுழையும்போது, முன் வாயிற் பூஞ்சோலையில் "திருலோக சீதாராம் (திருவையாறு லோகநாதசீதாராம்) என்ற பெயர் என்னைக் கவர்ந்தது

'சிவாஜி' ஆண்டு மலர் ஒன்றில் (பல ஆண்டுகளுக்கு முன்பு) எனது கதை ஒன்று வெளியானது ஞாபகத்திற்கு வந்தது. விழுப்புரத்திலிருந்து அந்தக் காலத்தில் வெளிவந்து கொண்டிருந்த "ஆற்காடு தூதன்" என்ற வாரப்பத்திரிகையினை நடத்திக் கொண்டிருந்த என் நண்பர் சீதாராம், பின்னர் (ரெட்டியார்) துறையூரிலிருந்து வெளியாகிக் கொண்டிருந்த (கிராம) "ஊழியன்" பத்திரிகையில் பணியாற்றினர். இதற்குப் பிறகு தான் திருச்சி திரு சிவஞானத்தின் (?) 'சிவாஜிக்கு வந்தார். தூய கதராடை, "சிம்மக் குரல்" சதாகாலமும் வெற்றிலை, பாக்குப்புகையிலை குதப்பிய வாயுடன் காட்சியளிப்பார். "கண்ணன்" என்ற புனை பெயரில் அவர் எழுதிய "நண்பனுக்கு" என்று மகுடமிட்ட பாட்டு ஒன்று

"அன்றொரு நாள் என் மனத்தே அமர்ந்தனை!
ஆவலுடன் கை கோர்த்து நின்றனை" என்ற வரிகளுடன் தொடங்குகிறது,

தமிழ் நாட்டிலேயே பாரதியின் பாடல்கள் ஒரு வார்த்தை பிசகாமல் - ஒப்புவிப்பவர்கள் இருவரே அந்தக் காலத்தில் இருந்தனர்.

ஒருவர் திரு. சீனிவாச ராவ், மாத்வப் பிராமணர், இவரைப் பற்றிச் சொல்லப் போகையில் சிறிய கதை ஒன்று நினைவில் வருகிறது.

தியாக ப்ரம்மத்திடம் ஈடுபாடு கொண்ட ஒரு ரசிகர் தனது இரண்டு புத்திரர்களையும், சங்கீதப் பயிற்சிக்காக வித்வான் ஒருவரிடம் அனுப்பினர். காலையில் ஒரு பையனுக்கும் மாலையில் மற்றவனுக்கும் சிட்சை ஆரம்பித்தார்.

காலையில் வந்தவனிடம் "இந்தக் கீர்த்தனையை நான் பாடுவது போலப் பாடு" என்று உத்தரவிட்டு

"சுஜன ஜீவனு, ராமா, சுகுண பூஷணு
புஜக பூஷணு..........புஜக நாவனு" என்று

பாடிக்காட்டினர். மாணவன் "ஸுஸன ஸீவனு, ராமா, ஸுகுண பூஸனு

"புஸக பூஸனு....... புஸக நாவனு" என்றுனே பார்ப்போம், வித்வான் மயக்கம் போட்டு விழுந்து விட்டார். சுட்டுப் போட்டாலும் இவனுக்கு "ஜகரம்" வராது என்று கண்டார். இவனைப்போலவே இவன் சகோதரனுமிருப்பான் என்ற நினைப்பில்' மாலையில் வந்த மற்றவனிடம்

"ஸரஸ சாமதான பேத தண்ட சதுரா
பரமசாம்பவா................" எனத் தொடங்கி
பாடச் சொன்னர் அவனே "ஜரஜ ஜாமதான
பேத தண்ட ஜதுரா

பரம ஜாம்பவா.... என்று "ஸ்" போட்டான் பாவம் வித்வான்! அகால மரணமடைந்தார் திடீர் ஹிருதயத் தாக்குதலால்.

திரு, சீனிவாச ராவ் அவர்கள் இந்த இரு பையன்கள் ரகத்தை சேர்ந்தவரே,

"உலவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம் வீணில் உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்வோம். விலலுக்கு நீர் பாய்ச்சி" என்று அவர் பாடுவார், வயிறு எரியும்

“ அறவலிகொத்து நாளும் அன்னையின் பணிக்கென்றே

உறையினுள் உறங்கும் வீரம் உருவினோம், ஓங்கி விட்டோம் ” எனச் சிங்க ஏற்றின் குரல் பாய்ச்சிக் கடல் முழங்கியதென முழங்கிய கவி முழங்கிய வாசாலன் ” ஆகியதிருலோகம்,

தொலை யெட்டிக்
கரையுற்றுத்
துயரற்று விடுபட்டுத்
துணிவுற்ற குல சக்தி

சரணத்தில் முடிதொட்டு,’ எனக் கர்ஜனை செய்யும்போது ரோமாஞ்சாலி செய்யும்.

குரலை ஏற்றியுந் தாழ்த்தியும், பாவத்துடனும், கம்பீரமாக

“ சக்கரத்தை எடுப்பதொரு கணம்
தருமம் பாரில் தழைத்தல் மறுகணம்
இக் கணத்திலிடைக்கணமொன்றுண்டோ”

என வினவுவார் கவிதைக் ” கண்ணனுகிய திருலோகம்,”

குறைந்தது ஒரு நூறு ரூபாயையாவது அவருக்குக் கப்பம் கட்டி, அவர் வாயால் “ பாஞ்சாலி சபதம் ” கேட்டவர்களில் நானுமொருவன்.

அடிபிசகாமல் பிறழாமல் அட்சர சுத்தமாக ‘ பாஞ்சாலி செய்த சபதத்தைக் கூறுமுன், சற்றுத் தணிவான குரலில், வில்லிப் புத்தூராரின் பாஞ்சாலி

“ அரசவையில் எனை ஏற்றி அஞ்சாமல்
துகில் தீண்டி அளகந் தீண்டி
விரைசெய் அளி இனம் படிதார்வேந்தார் எதிர்
தகாதெனவே விளம்புவோரை
பொருசமரில் முடி துணித்துப் புலால்நாறு
வெங்குருதி பொழிய வெற்றி
முரசு அறையும் பொழுது அல்லால் விரித்த குழல் இனி எடுத்து முடியேன் எனச் சபதமிட்டதைச் சொல்லுவார் ஒரு விநாடி சபையோரைப் பார்ப்பார் ஓம்! ஓம்!! ” என உறுமுவார்

“ ...... ஓம், தேவி பராசக்தியாணை
உரைத்தேன்;
பாவி துச்சாதனன் செந்நீர்—அந்தப்
பாழ் துரியோதனன் ஆக்கையிரத்தம்
மேவியிரண்டுங் கலந்து—குழல்
மீதினிற் பூசி நறு நெய் குளித்தே
சீவிக்குழல் முடிப்பேன் யான் — இது
செய்யுமுன் முடியேனெ ன்றுரைத்தாள்
ஓமென்றுரைத்தனர் தேவர், ஓம்
ஓமென்று சொல்லி உறுமிற்று வானம் ”

கர்ஜனை! கர்ஜனை!! கர்ஜனை!!! நினைத்தாலே நெஞ்சுநெக்கு விட்டுப்போகிறது. பொட்டைக் கண்களில் நீர் சுரக்கிறது. அந்த அமரர் நாமம் வாழ்க!

“ பாரதி எனக்குப் புரியவில்லை ” யென்ற தலைப்பில் புதுவையில் சே. அ. பேசினுராம்,

எது புரியவில்லை? யாருக்குப் புரிய வில்லை? என்ன புரியவில்லை! சே. அ. க்கா புரியவில்லை?

அடக்கத்தாலேயே அவ்வாறு சொல்லியிருக்கிருர்.

எனக்குத் தெரிந்த வரையில் “ எனக்குப் புரிய வில்லை என ஒப்புக்கொண்டவர் சீன ஞானி கன்பியூஷியஸ் ஒருவரே;

“ எல்லாம் தெரிந்தவர்” என நாட்டு மக்கள் அனைவராலும் ஒரு சேர மதிக்கப் பெற்ற கன்பியூஷியஸை ஒரு நாள் காலையில் இரு சிறுவர்கள் சந்தித்தனர். புவி இயல்பும், வான சாஸ்திரம் முதலியன சிறிதளவு கூடத்தெரியாத காலம் அது

“ தாத்தா ஒரு சந்தேகம் ”

“ சொல்லுங்கள் ”

“ சூரியன் காலை வேளையில் பூமிக்கருகில் இருக்கிறதா? அல்லது நண்பகலிலா? காலையிலேயே இருக்கிறதென்று நான் சொல்லுகிறேன். இவனோ நண்பகலில் என்கிருன். எது சரி தாத்தா?”

“ சூரியன் காலையிலே தான், பூமிக்கருகில் இருப்பதாக, எந்த காரணத்தைக் கொண்டு நீ சொல்லுகிருய்? ”

'' நம் அருகில் ஒரு பொருள் இருக்கும்போது பெரிதாகத் தெரிகிறது. காலை வேளையில் சூரியன் பெரிதாகத் தெரிகிறது அதே பொருள் தொலைவில் போகப் போகச் சிறிதாகிக் கொண்டே வருகிறது. நண்பகலில் சூரியன் சிறிய வட்டமாகத் தெரிகிறது. எனவே காலை வேளையிலேயே, சூரியன் பூமிக்கருகிலிருக்கிறான். ''

தாடியை உருவிக்கொண்டே, இரண்டாஞ் சிறுவனை விளித்து '' நண்பகலில் தான், சூரியன் பூமிக்கருகில் இருக்கிறது என்பதை, எந்தக் காரணத்தால் நீ சொல்லுகிறாய்?'' என்றார் கிழவர்.

'' தாத்தா மிக உஷ்ணமான ஒரு பொருள் நம் பக்கலில் இருக்கும் போதே வெப்பம் அதிகமாகிறது. தொலைவில் போகப் போக, வெப்பத்தின் வேகம் குறைகிறது காலை வேளையில் சூரிய வெப்பம் குறைவாகயிருக்கிறது. நண்பகலில் அதிகமாகிறது. எனவே, நண்பகலிலேயே, சூரியன் நமக்குப் பக்கலிலிருக்கிறான்.

கன்பியூஷியஸுக்கு எப்படி இந்தப்புதிரைத் தீர்ப்பது என்று புரியவில்லையாம் ''எனக்கு புரியவில்லை; எனக்குத் தெரியவுமில்லை'' என்றாராம்.

விழுந்த ஞாயிறு எழுவதன்முன் ஆராய்ந்து, எழுந்த ஞாயிறு விழுமுன் கவி எழுநூறு பாடிய கம்பனைப்போல இரண்டு மாதங்களில் பாரதியின் குயில் பாட்டை ஆங்கிலத்தில் கருத்துச்சிதறாமல், சிந்தாமல் அழகாக மொழி பெயர்த்தவருக்கா ''புரியவில்லை! '' நம்ப முடியாது.

'' சந்திர னொளியை ஈசன்
சமைத்தது பருக வென்றே
வந்திடு சாதகப் புள் வகுத்தனன் ''

சந்திர ஒளியைப் பருகுவது சாதகப்புள்ளா? சகோர பட்சியா? புரியவில்லை

'' வாழ்க நீ! எம்மான், இந்த
வையத்து நாட்டி லெல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி
விடுதலை தவறிக் கெட்டு .......''

'' விடுதலை கெட்டு '' என்று சொன்னாலே போதாதா? விடுதலை தவறிக் ''கெட்டு'' என்று ஏன் சொன்னார். ''தவறி'' என்ற வார்த்தையை எதற்காகச் சேர்த்திருக்கவேண்டும்.?

புரியவில்லை

'' வெள்ளிப் பனிமலையின் மீதுலவுவோம்— அடி
மேலைக் கடல் முழுதுங் கப்பல் விடுவோம்

முதல் வரியில் காணப் பெறும் '' அடி ' என்ற வார்த்தை எந்தப் பொருளில் உபயோகப் படுத்தப் பட்டிருக்கிறது? புரியவில்லை

'' தீக்குள் விரலை வைத்தால் நந்தலாலா—
நின்னைத்
தீண்டு மின்பந் தோன்றுதடா நந்தலாலா ''

அப்படியா! புரியவில்லை,

இன்றைய நாட்டு நிலையில் படிக்கும் மக்கள் விரும்புவன காதல் கதைகள், நவீனங்கள் மர்மக் கதைகள் சினிமா பாட்டுப் புஸ்தகங்களே தமிழ்க் கவிதையின் ஆங்கில மொழி பெயர்ப்பு என்றால் அருகில் கூட வரமாட்டார்கள்.

'' வெடுக் '' கென்று தானணைத்தான்
'' விடாதீர் '' என்றாள். இவர்களுக்குப் பிடிக்கும்.

மூட்டை தூக்கும் முத்தையன் தெரு ஓரத்தில் தோசை சுடும் முத்தம்மாளைக் காதலித்தான் என்று எழுதினால் ரசிப்பார்கள்.

தன்னுடன் பிறந்த சகோதரியுடன் அண்ணன், கலவியில் ஈடுபட்டிருந்தான் என்று படித்து விட்டு, மகிழ்ச்சியடைவார்கள்.

பிறந்தது முதல் தன்னை ஆளாக்கி வளர்த்த செவிலித்தாயிடம் ''ஸ்தன பானம்'' செய்தான் ஒரு வாலிபன் என்று எழுதி முடிக்கப்பட்ட சிறு கதையொன்றும் தமிழ் வாசகர்களிடையே மிகுந்த செல்வாக்குடன் உலவி வருகிறது,

தமிழ் நாட்டில் விலை கொடுத்துக் கவிதைப் புத்தகங்கள் வாங்குவோர் மிக மிகக் குறைவு. அதிலும் ஆங்கில மொழி பெயர்ப்பைக் கையாலே கூடத் தொடமாட்டார்கள், காகித விலை, அச்சுக் கூலி, உழைப்பு, வெளியீட்டுச் செலவு ஆகியவற்றைக் கணக்குப் பார்த்தால், புத்தக விற்பனையில் செலவு போக மிச்சம் என்னயிருக்கும்? ஆசிரியருக்கு எவ்வளவு கிடைக்கும்? மதிப்புரைக்காகப் பத்திரிகைகளுக்கும், வேண்டியவர்களுக்குஇனாமாகவும் பலபிரதிகள் செலவாகிவிடும் அப்படி படிக்கக் கொடுத்தாலும் திறனில்லாமல் நுனிப்புல் மேய்வார்கள். 'பலே' பேஷ் என்று சொல்லி ஆக்கியோனைத் திருப்திப் படுத்தப்

பார்ப்பார்கள் இல்லையேல், சுமாராகயிருக்கிறது என்று இழுப்பார்கள் அல்லது ஆசிரியனின் சொந்த வாழ்க்கையை "காலிப்பயல்" குடிகாரன், குச்சு நுழைபவன், போதை குரு, இவன் கவிதை வேறு எழுத ஆரம்பித்து விட்டானு," என ஏளனம் செய்வார்கள். பாடல் ஆசிரியர் ஒருவரைப் பற்றி "தடுமாறும் போதையிலும் கவிபாடும் இவன் மேதை "என" வேறொருவர் எழுதியிருந்ததை அண்மையில் படித்தேன்.

இத்தகைய சூழ் நிலையில் ஆங்கில விநாயர் நான்மணிமாலை பிரதி ஒன்று ஐந்து ரூபாய்க்கும் குயில் பாட்டு பிரதி ஒன்று பத்து ரூபாய்க்கும் விற்கப்படும் எனக் குறிப்பிடப்பட்டிருக்கிறது மிக மிகக் குறைந்த விலை. லட்சக்கணக்கான பிரதிகள் விற்பனையாக வேண்டுமென்பதே எனது ஆசையும் பிராத்தனையுமாகும்.

மனப்புண்ணும், துயரமும், அவமானமும், ஏமாற்றமும் மலிந்து கிடப்பது என் வாழ்க்கை. வாழ்வு ஒரு பெரும் பாரம் என்று நிச்சயிக்கும்படியாக அளவற்ற தொல்லைகளும் நானுவித அல்லல்களும் நிறைந்தவை என் இன்றைய நிலைமை. புண்ணைக் கையால் தடவிக்கொடுத்தாலொழிய மனிதனுக்குச் சமாதானம் உண்டாவதில்லை; துன்பமும் அத்தகையதே. அதை ஞாபகப் படுத்திக் கொள்வதிலேயே ஒருவித இன்பம் உண்டாகிறது. உடலில் உண்டாகும் காயத்தைத் திறந்து வைப்பதால் சீழ் பிடிக்கும்; ஆனுல் மனத்தில் உண்டாகும் காயத்தைத் திறப்பதால் தான் அது குணப்படும். என் மனப்புண்ணை மாற்றவல்ல மருந்தாக ஆங்கில விநாயகர் நாண்மணிமாலை அமைந்திருக்கிறது.

"I had dedicated my life and heart
To Thee only; pray rid all
my distress .... .... ..."

வரிகளைப் பலமுறை ஒவ்வொரு நாளும் சொல்லிப் பிரார்த்திக்கிறேன். பயனுள்ள வரிகளாம் என்ற நம்பிக்கையில்.

சே. அ. யின் ஆங்கில மொழி பெயர்ப்புக்களுக்கு, விமர்சனமோ, திறனுய்வோ. செய்வதற்கு எனக்குத் தகுதியுமில்லை; யோக்கிதையுமில்லை. இனி நான்சொல்லப் போவதில், கோர்வையோ, தொடர்ச்சியோ இருக்காது ஒழுங்கான கட்டு கோப்புக்குள் நான் எழுதப்போகிறேன் என்பது, "சஞ்சீவி மலையை நான்" அலாக்காகத் தூக்கி நிறுத்தப் போகிறேன் என்று குசேலர் சொல்வதற்கு ஒப்பாகும். இனி வரப் போவதை "அழுகிய அவியல்," "பேத்தல்" "பிதற்றல்" "Galtimanfry," "Hash" "Absurd medley" "Hotch Potch," "Olla-Padruda" என்று கொள்ளலாம்.

குருட்டு விழி விழிக்கும் விந்தைச் சமூகத்தினிடம் சேக்கிழார் அடிப்பொடி அழகாக உண்மையைச் சொல்லுகிறுர்.

உண்மையை அழகாகச் சொல்வது கவிதை; நிரந்தரமான உண்மைக் கருத்தை, அழகான சொற்களால் புனைந்து இனிய, தெளிந்த நடையில் உணர்ச்சியை எழுப்பக்கூடிய முறையில் சொல்லுவது மெய்யான கவிதை.

உயர்ந்த கவிதைக்கு உண்மை முக்கியம்; கருத்து முக்கியம்; சொல்லழகு முக்கியம்; புஷ்டியான எளிய நடை முக்கியம்; இவை இருந்தால் உணர்ச்சி இன்பம் தானே கொப்புளிக்கும்.

---

"கவிதையெனும் அணங்கு, இலக்கண வித்வானைத் தந்தையென மதித்து. அவனை அணுகாள்.

தார்க்கிகனைச் சகோதரன் எனப் பாவித்து அவனை நெருங்காள்.

வேதாத்யானம் செய்தவனை (யும் சந்தத்தையே கவனிப்பவனையும்) விட்டுச், சண்டாளர்களிடமிருந்து ஓடுகிறவர்கள்போல ஓடியே போய் விடுவாள்.

மீமாம்ஸையை ஆராய்பவனை நபும்ஸகன் என்று நினைத்து அவமதித்து விடுகிறாள்.

காவ்யாலங்கார சாஸ்திரமறிந்தவனைக் கண்டதும் அவனையே தன் கொழுநனாகப் பாவித்து அவனைச் சேருகிறாள்" — (வ வே. சு. அய்யர்)

பாட்டுத் திறத்தாலே இந்த வையத்தைப் பாலித்திட வந்த சே அ. யைக் காவ்யாலங்கார சாஸ்திரி என்றே சொல்லலாம்.

அழகாகச் சொல்லி, உண்மைக் கருத்தைப் புனைந்து, உணர்ச்சியை யெழுப்பி, புஷ்டியான எளிய நடையில் சொல்லழகுடன் காணப்படும் விநாயகர் நான்மணிமாலை (ஆங்கிலம்) ராஜபாட்டையில் ஜதி நடை போட்டுக் கம்பீரமாகச் செல்லும் பஞ்சகல்யாணி போல் அமைந்துள்ளது.

விநாயகர் நான்மணிமாலையில், பாரதியாரின் கையெழுத்துப் பிரதி பூர்த்தியாகாதிருந்த இடங்களில், திரு. தேசிகவிநாயகம் பிள்ளை, தவயோகி தவத்திரு சுத்தானந்த பாரதி அவர்கள் ஆகிய இருவரையும் கொண்டு பூர்த்தி செய்யப்பட்டது. கையெழுத்துப் பிரதியால் காணுதன நக வளைவுகளுக்குள் (Brackets) தரப்பட்டன.

நக வளைவுகள் உட்பட சே. அ. யின் தமிழ் விநாயகர் நான்மணிமாலை வெளியாயிருப்பது தான் நியாயம்.

பான்மை தவறி நடுங்காதே

பயத்தாலேதும் பயனில்லை

இவ்விரு வரிகளையும்

"Swerve not from thy state; nor
shouldst thou tremble
of what avail is fear" எனக் "கச்சிதமாக" மொழி பெயர்த்திருக்கிறார்.

1) "நமக்குத் தொழில் கவிதை — — — மைந்தன் கணநாதன் நங்குடியை வாழ வைப்பான் — — —"

"The son dear to uma" க்குப் பிறகு தமிழில் காணப்படும் "கணநாதன்" ஆங்கிலத்தில் "அபேஸ்" ஆகி விட்டார்!

2) — — — inner ears
will ope; the eyne of soul "ll shine in lustre;
Flame will issue; manliness will mature"

3) "Work done in sooth is your work":

4) .... ... no stir should my mind
Agitate; no murk should ev'r my intellect cloud',

5) Duties indeed are; to control the mind,
To rid th' misery of others; to pray
For the welfare f others; to worship
The one x x x x
Four are the fruits of these;
they are in sooth. Righteousnes,
Wealth (or is it weath "as found in the translations) Joy and Bliss of Release ... ...."

6. "Humble, strong dear and sweet unto ev'ry one .... ..."

7) "uttered words are Scripture's praise"

8) " .... .... no room
Thou shalt to deceitful worry
Yield — — —"

9) " — — They who bear patiently-
are'nt these — — who Can.
The world govern?

10) " — — and make my tongue.
Revel in a million songs rich with
The sweetness of mellow melliflunce."

11) " — — May love and forbear — ance.

on earth prosper ; Rid of pain penury
Illness and death may all lives in delight
Dwell — — '' அசலை மீறிய நகல்!
அட்சரலட்சம் பெறும் அமுத வரிகள் !-
சே. அ வாழ்க.

படைப்பில் எல்லா ஜீவராசிகளோடும் அவைகளின் சலனத்தோடும் ஒட்டிக்கொள்ளும் தன்மையைக் கவியுள்ளம் என்று கொள்ளலாம். ஒரு சித்திரத்தை வரையும்போது, தான் வேறு, சித்திரம் வேறு என்ற உணர்ச்சியுடன் ஒரு கலைஞன் இருக்கிறன்; கவிஞனுக்கு அப்படிப் பட்ட நிலைமையே இருக்க முடியாது.

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமு மாக வளர்ந்து, வளர்பிறையாக உலகுக்கு இன்றும் என்றும் நிலைத்திருக்கப் போகிறவர் பாரதி. அவர் உலக மகாகவி. ஆத்ம விசாரம் செய்யும் கழைக்கூத்தாடி யல்லர்.

'' அறஞ் செய விரும்பு, '' '' ஆறுவது சினம். '' இத்தகைய ஆரம்பம் பழைய காலத் திற்கு ஏற்றதாக இருந்தது. பாரதியார் தர்மத்தை வெறுப்பவரல்ல; சாந்தத்தைப் பகைக்கிரவரும் அல்ல. ஆனல், தமிழகத்தில் சோற்றுக்கே தாளம் போடும் மனிதர்கள் நிரம்பிய இந்தக் காலத்தில் அறம் செய விரும்பு என்று சொல்ல வேண்டியது அவசியந்தானு? தர்ம சத்திரங்கள் சோம்பேறி மடங்களாகி விட்டன. ஆறுவது சினம் என்று சொல்லிச் சொல்லி நம் சாதியே குனிந்து, குனிந்து கோழையாகி விட்டது. நம் மக்களுக்குச் சண்டை போடவும், வெறி மூளவும் மான உணர்ச்சி மலியவும் உபதேசம் செய்ய வேண்டும் என்று பாரதியார் யோசித்தார். காட்டாற்று வெள்ளம்போலக் கொட்டினர்

' அச்சந் தவிர் ' ' ஆண்மை தவறேல் ' 'கோல் கைக் கொண்டு வாழ்' ' சாவதற் கஞ்சேல் '' '' தொண்டு நிலையைத் ' தூ ' வென்று தள்ளு '' ' மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்து ' பாதகம் செய்வாரைக் கண்டால் பயப்படாதே; அவரை மோதி மிதித்து, அவர் முகத்தில் உமிழ்ந்து விடு ''



'' தலையில் இடி விழுந்தால் சஞ்சலப்படாதே; ''
Flurry not if thunder on thy head falls
'' கவலைப்படுதலே கருநரகு அம்மா ! ''
கவலையற்றிருத்தலே முக்தி.
Worrying indeed is black Inferno;
'' Liberation from worry is Freedom ''
பொருத்தமான மொழி பெயர்ப்பு

ஒரு பொருளின் வசீகரமான தோற்றமானது நமது மனதைக் கவர்கிறது. கவர்ந்ததின் காரண மாக, அதை மிக்க ஈடு பாட்டோடு உற்று நோக்குகிறேம். நோக்கவே நமது மனத்தில் ஒரு பாவனை உருவாகிறது. அப்படி உருவாகும் பாவனையைக் கல்லிலும் தீட்டலாம்: சொல்லி லும் தீட்டலாம்;

அமரகவி பாரதியார் சூரிய உதயத்தைப் பார்க்கிறர். சூரியனுடைய பரிமாணம், சூரியனுக்கும் பூமிக்கும் உள்ள தூரம், சூரியனிட மிருந்து பூமிக்கு ஒளி வர எத்தனை காலம்பிடிக்கும்

என்பதைக் கணக்கிட்டு அவர் பாடியிருப்பாரே யானால் உப்பு சப்பு இல்லாமல் இருந்திருக்கும். அப்படியா பாடுகிறார்? இல்லை. சூரியனுடைய தோற்ற அழகையும் ஆகாய வெளியிலே பொன்னிறக் கதிர்கள் நீந்திச் செல்லுகின்ற லாவண்யத்தையும் பார்க்கிறார். மேதை மணம் கமழும் மனத்தில் ஏதோ ஓர் பாவனை உருவாகிறது. அவர் கவிஞனை படியால் வார்த்தைகளின் மூலம், எத்தனை விதமாகவே வெளியிடுகின்றார். "இரவி நின்றது காண், விண்ணிலே, இன்ப ஒளித்திரளாய், பரவி எங்கனுமே கதிர்கள் பாடிக் களித்தனவே. அவர் கண்களுக் கதிர்கள் பாடிக் களிக்கின்றன. இன்னும் சொல்கிறார்.

"காலைக் கதிரழகின் கற்பனைகள் பாடுகின்றேன்"
தங்கம் உருக்கித் தழல் குறைத்துத் தேனாக்கி
எங்கும் பரப்பியதோர் இங்கிதமோ?"

x x x

"புல்லை நகையுறுத்திப் பூவை வியப்பாக்கி
மண்ணைத் தெளிவாக்கி, நீரில் மலர்ச்சி தந்து
விண்ணை வெளியாக்கி, விந்தை செயும்
சோதியினைக்
காலைப் பொழுதினிலே கண்விழித்து
நான் தொழுதேன்"



இந்த வரிகளைத் தொய்வு விழாமல், துவளாமல், கருத்துச்சேதமில்லாமல் எவ்வளவு மகோன்னதமாக. ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறார், சே. அ.

..............O, god, sing the glories
And fancies too, of morns beauteous rays,
Molten gold, mollified, mellifluemt
Bright bedews, aye, every spot in the Sky"
(O, god, ஏன், எதற்காக. எங்கிருந்து முளைத்தது?)

x x x

It wreathes the grass in smiles makes the blossom
Bloom a marvel, rids the earth of Vapours foul;
gives unto water Joyance; turns heaven
Into ether and thus authors wonders
Opening eyes in morn, I, this light adored
அசலுக்குப் பொருத்தமான நகல் :

x x x

1. ... ... ... .... நெல்லிடிக்கும்
கோற்றொடியார் "குக்கு" வெனக் கொஞ்சும்
ஒலியினும்,
": In the caresssing refrain "Kuck-a-Kuck"
Breathed by the belles, who the paddy pound"
என்பதற்கு

2. "சுண்ண முடிப்பார் தம் சுவை மிகுந்த
பண்களிலும்
"In the lovely lays of lasses, pounding nuts
And spikenard to dust o' gold
iridescent !
என்பது பொருத்தமாகுமா?

சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் "கம்ப நாட்டாழ்வார்" என்ற தமிழ் மாத இதழ் கோவையிலிருந்து வெளி வந்து கொண்டிருந்தது. அதன் ஆசிரியர் "ஸ்வர்க்கவாசி! திரு. ரெங்கசாமி அய்யங்கார் என்பவர் கற்றுத் தேர்ந்தவர். அவர் சொல்லுவார்,

'' வாக்குண்டாம் நல்லமனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு ''

என்றபாட்டு விநாயகரை வணங்கும் வரிகளாகும் யாவர்க்கும் இது தெரிந்ததே.

ஆனல் இந்த நாலு வரிகளில் உள்ள உள்ளர்த்தம் வேறு பொருள், மறைந்து கிடக்கிறது. அதாவது

பூக்கொண்டு பாதம் — பூவிலிருந்து வேர் ஈருக
துப்பார் திருமேனி – மாசு இல்லாத குப்பைமேனி
தும்பி — தும்பை
கையான் — கையாந்தரை
(கரிசலாங்கண்ணி)

இவை மூன்றையும் '' சமூலம் '' எண்ணெயி) லிட்டுக் காய்ச்சி தலைமுதல் கால் வரை, நாள் தோறும் தேய்த்து ஸ்நானம் செய்து வந்தால் வாக்குண்டாம், நல்லமனமுண்டாகும் மாமலராள் நோக்கு கிடைக்கும், மேனி சற்றும் நுடங்காது '' என்று விளக்கம் சொல்லுவார்.

அதே போல

'' ஆன்ற தமிழ்புலவீர்! கற்பனை யேயானலும்
வேதாந்தமாக விரித்துப் பொருளுரைக்க
யாதானும் சற்றே இடமிருந்தால் கூறீரோ!''
என்பதை

'O, ye Tamil Bards, though this be fancy
Is there not in this, aught of the mystique
Try then to dig up the arcana per due''

என ஆங்கிலத்தில் சே. அ. தந்து விட்டுத் தனது Notes ல்(நான் குறிப்பிட்ட ரெங்கசாமி அய்யங்கார் போலவே)

''In all eisteddfodau (r) arranged to sing in Verse the mystique of the SONG OF THE KUYIL, Bharati will be present, At the end' Bharati, will whisper into devotee — ears

என்று விளக்கம் தருகிருர் என்ன சொல்லுகிருர் என்பது எனக்குப் புரியவில்லை, புரியவே இல்லை

செந்நிறத்து மெல்லிதழ் பூங்கமலத் தெய்வப் பெண் என்று மட்டும் வர்ணித்தால் போதுமா! ''பொங்கி வரும் பெருநிலவு போன்ற வொளி முகமும் புன்னகையின் புது நிலவும் போன்ற வருந் தோற்றம் துங்க மணி மின் போலும் வடிவத் தாள்'' என்று விவரித்தால் போதுமா?

கொஞ்சமும் போதாது

'' .. .... கவிதைக் கனி பிழிந்த
சாற்றினிலே பண்கூத்(து) எனுமிவற்றின் சார
மெலாம்
ஏற்றி அதனேடே இன்னமுதைத் தான் கலந்து
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினுல்
மாதவளின் மேனி வகுத்தான் பிரமன் என்பேன்''

இவை போதுமா? ஊஹூம் !;

To the Juice distill'd from Poesy's fruitage
Was added the essence pure, of music
Melodious and dance divine; rectar
Aye, rectar sweet, was with this '' mixed'
the sun of Love on this his beams gladly
impressed; From the dulcified Compound
thus Concocted-A lump of pulchritude - the
Creator Wrought the body of this lass
unparalleled.

போதும் திருப்தி ! திருப்தி !!

ஜீவன் நிறைந்த ஆங்கிலவரிகள்! நெஞ்சைக் குதூகலிக்கச் செய்யும் மொழி பெயர்ப்பு.

பவித்ரமான கங்கை நதியை Liquid History என்று வர்ணித்தார் ஒரு மேதை.

டாக்டர் அன்னிபெஸண்ட் அம்மையாரோ

"When the nations of the Earth were sent forth one after the other a special word was given by God to each, the word which, each was to say to the world" the peculiar word which each one was to speak. As we glance over the history of the nations, we can hear resounding from the collective mouth of the people, this word spoken out in action, the contribution of that nation' to the ideal and perfect humanity.

To Egypt in old days the word was Religion:

To Persia the word was Purity;
To Chaldea the word was Science;
To Greece the word was Beauty;
To Rome the word was Law;

And to India, the eldest-born of His Children. He gave a word, that summed up the whole, in one,

The word DHARMA

That is the word of India, to the world.

மேலே கண்டவற்றையே ரத்னச் சுருக்கமாக, "தான்போம வழியெலாந் தன்மமொடு பொன் விளைக்கும் வான் போந்த கங்கை" யென வர்ணிக்கிறார் பாரதி.

பிரமிக்கும்படியான கதியில் மறுமலர்ச்சி வேகம் பரவி வருகின்றது. மாமூல் கோட்டைகள் நொறுங்குகின்றன. நம்பக்கூடியதை ஏன் நம்ப வேண்டும்? வெறுக்கக்கூடியதையும் ஏன் வெறுக்க வேண்டும் என்றுள்ள மனோ நிலை நாளும் நாளும் தடித்து வருகின்றது. காலம் போகிற போக்கைப் பார்த்தால் ஆலயங்களில் விக்ரகங்களுக்கு இடமிருக்காது என்றே தோன்றுகிறது. அவைகளின் ஸ்தானத்தை "ஏன்" (?) என்ற கேள்வி அடையாளமே கவர்ந்து கொள்ளும் போலும். கேள்விக்குறியைப் பாராட்டி இனிமேல் பிள்ளைத்தமிழும் மற்றப் பிரபந்தங்களும் எழுவதானால் ஆச்சர்யங் கொள்வதற்கில்லை.

இத்தகைய நிலையில், பாரதியாரின் விநாயகர் நான்மணிமாலையையும், குயில் பாட்டையும் ஆங்கிலத்தில் தந்த சே. அ. யைப் பாராட்டுகிறேன்; அவரது தைரியத்தை மெச்சுகிறேன்.

அழகான நந்தவனத்திற்குள் அழைத்துச் சென்று, 'அந்தப் பூவைப்பார்,' 'இந்த பூங்கொத்தைப் பார்,' 'அந்தச் செங்கழுநீரைப்பார், 'இந்தப் பசுந்துளி பார்,' தாமரைப் பொய்கைபார், நீரோடையைப்பார், வர்ணஜாலம் பார், நிறக் கலைபார், காட்சி யின்பம் பார்' என்றெல்லாம் காட்டுவது போல 'இந்தப் பாட்டின் பொருளைப் பார், இந்த மொழி பெயர்ப்பின் சொல்லழகு பார்' வேறு பாட்டின் பண்ணழகு பார், சப்தஜாலம் பார், இன்னொரு பாட்டின் பக்தி மணத்தை அனுபவி. அன்புத் தேன் பருகு. கவிதைப் பூந்துளிரைக்கண்டு களிப்பாய்" என்றெல்லாம் காட்டிக் கொண்டே போகலாம் சேக்கிழார் அடிப்பொடியின் இரு ஆங்கில நூல்களிலும்

உண்மை; புகழ்ச்சியில்லை,

நம்பிக்கையை உயர்த்தி உயர்ந்த எண்ணங்களை எழுப்பி மக்களின் வாழ்க்கையை அழகு செய்து, வளமுறச் செய்ய வேண்டுமென்ற குறிக்கோளுடன், ஒரு சேரத்திரண்டு, ஆடாமல், அசையாமல், மோனத்தவம் புரியும் தஞ்சை பெரிய கோயிலின் நிழலில் ஆலிவர் கோல்ட் ஸ்மித்தின்" கிராமப்பள்ளி ஆசிரியரைப்போல், (The Village School Master) "And still they gazed and still the wonder grew, How so small a head could carry all he knew" என்ற வரிகளுக்கு இலக்கணமாக சேக்கிழார் அடிப்பொடி இன்று வாழ்கிறார்.

குடத்தினுள் விளக்கு; புகழுலகில் மகோன்னத ஸ்தானம் அண்மையிலேயே உள்ளது என மனம் சொல்லுகிறது.

மனத்துடன் வாதாட, வழக்கிட என்னால் முடியாது; முடியவே முடியாது ●

# காந்திஜி கனவு கண்ட பாரதம்

(ப. தனுஷ்கோடி)-



காந்திஜி ராம ராஜ்யம் அமையவேண்டும் என்றார். அப்படி என்றால் எல்லோருக்கும் எல்லாமும் கிடைக்க வேண்டும் என்று அர்த்தம். வர்ணாஸ்ரம தர்மம் தான் ராம ராஜ்யம் என்று குதர்க்கம் பேசுவார்கள்! காந்திஜி இன்று இருந்தால் இந்த நாடு இப்படியா இருக்கும் என்றும் சொல்வார்கள். உண்மையில் சுதந்திரத்துக்காக பாடுபட்ட ஒவ்வொருவரும் கனவு கண்ட ராஜ்யம் இன்று நடக்கவில்லை தான்! வேதனையாக இருக்கிறது. மக்கள் தொண்டு என்பதே சுதந்திரத்துக்கு முன் இருந்த அடிப்படை! அதற்கு நிர்மாண திட்டம் என்று காந்திஜி பெயரும் வைத்தார். மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்று அதை தெய்வத் தன்மையுடன் எண்ணச் செய்தார். அதனால் சேவை என்பது புனிதமானது--சுயநலமற்றது என்று எல்லோரும் நினைத்தார்கள். அவை எல்லாம் இப்போது எங்கோ போய்விட்டது. எந்தக் கட்சியில் தேடினாலும் கிடைக்கவில்லை. காங்கிரஸ் உள்பட எந்தக் கட்சியிலும் நிர்மாண திட்டம் என்பதே கிடையாது. என்றைக்கோ மக்கள் வாழ்வை உயர்த்துவதாகக் கூறி தங்கள் வாழ்வை உயர்த்திக் கொள்கின்றனர். கட்சி ஒரு வியாபாரமாகி விட்டது. ஏன் மக்கள் நல்வாழ்விற்காக கவனம் செலுத்தக்கூடாது? மக்களுக்குத் தொண்டு செய்ய வழியே இல்லையா? மனமில்லையா?

நாடு முழுவதும் நியாய விலைக் கடைகள் என்று மக்கள் நன்மைக்காக ஏற்படுத்தியிருக்கிறார்கள். மற்ற கடைகள் எல்லாம் அநியாய விலைக் கடைகளா? அப்படி என்றால் அரசு ஏன் அவைகளை அனுமதிக்கிறது? என்ற கேள்விகள் நியாயமானவையே! ஆனால் எல்லாக் கடைகளும், எல்லா வியாபாரமும் நியாய விலைகளாக நடத்தும்படிச் செய்ய அரசாங்கத்துக்குத் திறமை இல்லை. ஊரார் வரிப்பணத்தை எடுத்து ஊர் ஊருக்குச் சில கடைகளை அமைத்து, அப்பொருட்களுக்கு மான்யம் அளித்து நியாயவிலைக் கடைகள் என்று கூறுவதா சிறப்பு? எனக்குக்கூட மான்யம் தந்தால் நானும் நியாயவிலைக் கடை நடத்துவேனே? அதில் என்ன ஆட்சித்திறமை இருக்கிறது? அதாவது ஒரு பொருள் ஒரு பகுதியில் ஒரு விலையாகவும், மற்றொரு பகுதியில் அதே பொருள் அதிக விலையாகவும் அமையக்காரணம், அரசின் கையாலாகாத இரட்டை விலைக் கொள்கை அல்லவா? இதை இன்னும் நீடித்துக் கொண்டே போகலாமா?

சரி; அவர்கள் கொள்கை நியாயமானதாகவே இருக்கட்டும். அவர்கள் போட்டு நடத்தும் சட்டதிட்டப்படியாகவாவது அக்கடைகள் நடக்கின்றனவா? இல்லையே! குறிக்கோள் என்ன? ஏழைகளுக்குக் குறைந்த விலையில் அத்தியாவசியப் பண்டங்கள் கிடைக்க வேண்டும் என்பதுதானே? அப்படியா நடக்கிறது? நடக்கும்படி சட்டதிட்டங்கள் தான் இருக்கிறதா? மாதத்திற்கு ஒரு கார்டுக்கு பத்து லிட்டர் மண்ணெண்ணெய் வாங்கிக் கொள்ளலாம் என்கிறார்கள். பத்து லிட்டர் எண்ணெயை ஒரேயடியாக வாங்க முடியுமா? பத்து கிலோ அரிசிதான் ஒரேயடியாக ஏழையால் வாங்க முடியுமா? ஏழை என்ன, நடுத்தர வர்க்கத்தால் கூட வாங்கி வைத்துக் கொள்ள முடியவில்லையே! சர்க்கரை, அரிசி, மைதா, ரவை, பாமாயில், கிருஷ்ணாயில், இப்படி பல பொருட்களை ஒன்றாக ஒரே சமயத்தில் சேர்த்தும் நாற்பது ஐம்பது ரூபாய்க்குப் போடுகிறார்கள். பணமுள்ளவரை வாங்கிக்

BOOK-REVIEW

# THE UNIQUE VIEWWPOINT OF POET

Author : Thiru A. V. Subramanian

Publisher : Surabharati Samiti, Osmania University Campus, Hyderabad — 500 007.

Pages 46. Price Rs. 5-00

Sri A. V. Subramanian is a master of many languages. He has studied the classics in depth. He wields a pen which is creative as well as transcreative.

The book under review, it may be said, is a monograph on Samskrit lirerary criticism The poet, his poesy and his personality, in the main, constitute the content of his work.

Poetry by its very nature is indefinable. It is said PRATIBA, VYUTPATI and ABHYASA play a combined role to produce poetry. Yet we cannot lose sight of an indescribable something, the authentic touch of which accounts for the witchery of poetry In poetry much more is seen than actually meets the eye. The trained rasika is ever alert to capture' wherever it occurs and in howsoever recondite form it be, that intimation of perspectival depth which according to Dr K.R. S. Iyengar is "Visual dhvani" The day dawns. To us it is an " every day banality ", to borrow the words of Sri. A. V. S. To Bharati every dawn is a new wonder and splendour,

Sri A. V S. deals with poetics in the traditional and yet in an individual, way. His interpretation of " dharsanam " adds an extra dimension to the Kuntakan view.

Is not rasa all? " Raso vai sa " is an Upanishadic affirmation. Rasa-association, rasa-enhancement, rasa-content and rasa-trends are hinted at and explained by the scholar-critic Sri A. V. S. He has a knack of communication which is the envy of the learned.He has a way of employing quotes which in the context, sub serve the views of the author, rather than stand out as ex cathedra statements robbing all the importance of the writer himself.

An introductory essay of about ten pages from the pen of the Samiti's Secretary, Sri. P. Sri Ramachandrudu is designed as an attractive vestibule which invites entry into the mansion.

It is however rather unfortunate that the elegance of the work is marred by too many errors of the press. Present day compositors are positive " decomposers ".

Sri A. V. S's work is a significant publication. His unpedantic but scholarly style clothes his work with a sweetness which satisfies but not cloys. This work of Sri. A. V. S. is bound to become the proud possession of every discerning scholar.

— T. N. R.

## மனதிலுறுதி வேண்டும்.

'பாரதி'

மனதி லுறுதி வேண்டும்
வாக்கினிலே யினிமை வேண்டும்
நினைவு நல்லது வேண்டும்
நெருங்கின பொருள் கைப்பட வேண்டும்
கனவு மெய்யப்பட வேண்டும்
கைவசமாவது விரைவில் வேண்டும்
தனமு மின்பமும் வேண்டும்
தரணியிலே பெருமை வேண்டும்
கண் திறந்திட வேண்டும்
காரியத்தி லுறுதி வேண்டும்
பெண் விடுதலை வேண்டும்
பெரிய கடவுள் காக்கவேண்டும்
மண் பயனுறல் வேண்டும்
வானகமிங்கு தென்பட வேண்டும்
உண்மை நின்றிட வேண்டும்.
ஓம் ஓம் ஓம் ஓம்.

ooOoo

## A BHARATI VIGNETTE

transcreated into English by
Prof : C S. Kamalapati

Will power, rocklike, Ironjawed, Firm and unflinching
Gentle words soft and sweet with native love embalmed
Upsurging from an affable heart abrim with good will;
The power to forge goals posited into achievements positive;
Competence and happiness in just proportion blent;
Honour and glory flowing from actual fulfilment
Of high dreams ably and nobly realized;
Oh, let me have all these immediately, here and now.

## AN APOSTROPHE TO BHARATI

(with ample apologies to wordsworth)

**BHARATI!** thou shouldst be living at this hour ;
Bharath hath need of thee : She is a fen
Of stagnant waters ; temple, sword and pen,
Public and private life, everyday every hour.
Have forfeited their ancient Indian dower
Of inward happiness, we are selfish men,
Oh ! raise us up, return to us again;
And give us manners, Virtue, freedom, power.
Thy soul was like a Star, and dwelt apart :
Thou hadst a voice whose sound was like the sea :
Pure as the naked heavens, majestc, free,
So did'st thou travel on life's common way,
In cheerful godliness; and yet thy heart
With the fate of thy great country always lay.

[மகா கவி மில்டனை (MILTON) ப்பற்றி வோர்ட்ஸ் வர்த் (WORDSWORTH) பாடிய ஒரு கவிதை இன்றைய இந்திய நிலையை சுட்டுவதாக உள்ளது. அக் கவிதையில் மில்டனுக்குப் பதிலாக, பாரதியைப் பொருத்திய கவிதையின் தமிழ் வடிவம், ]

பாரதியரே ! இன்றல்லவோ நீர் இங்கிருக்க வேண்டும் !
தேக்க நீர் நிறைந்து நாறிடும் குட்டை யொக்கும் இப்பாரதம்
உம் தேவையை, சேவையை, இன்று மிகவும் வேண்டுகிறது.
சமயம், ஆட்சி, கல்வி. இவைகளைக் காப்பாற்றும் கடமையினர், தாமே

மனத்தின்கண் மா சுற்று, தூய்மை துறந்து,
கயவராகி விட்டனரே !

ஐயகோ ! நாம் அனைவருமே சுய நலச்
சுரண்டர்களாகி விட்டோமே !

ஆகையால், பாரதியாரே, வருக; மீண்டும்
இவண் வந்திடுக.

ஒழுக்கக்கூன் நிமிர்த்தி, நேர் கொண்ட
பார்வையினைப் பழக்குவித்து,

மானம் மரியாதை, அன்பு, சுதந்திரப்பண்பு;
தூய்மை, துப்புரவு

இவையெலா மீந்து மீண்டு மெமை மனிதராக
உலவிடச் செய்க !

இம்மாற்றத்தை இயற்றவல்லார் நீர் ஒருவரே;
மற்றொருவரில்லை ;

உம் ஆன்மபலம், அத்துணை சக்தி பெற்றது,
அற்புதமானது.

அன்று உமதான்மா வானத்துச் சுடரென
பே ரொளி பரப்பி

தனி நின்று தூய்மை பேணி துங்கத்தார கை
யாய்த் துலங்கியது,

ஆர்ப்பரிக்கும் அலைகடலின் அரவம் போன்று
ஆணையிடும் உம் குரல்

நீல நெடுவானமென ஆழம், அழகு. சுத்தம்,
சூக்குமம் கொண்டது !

ஏற்றம் இத்தனை கொண்ட நீர் வாழ்ந்த விதம்,
அப்பப்பா,

எத்துணை சாமானியம். சகஜம், சாதாரணம்,
பரிவு, பண்பு !

ஆயினும் உம் நாட்டமெல்லாம் என்றும்
எப்போதும் கணம் கணமும்

நாட்டின் நல்வாழ்விலே, மக்களின்
மேம்பாட்டிலே, ஏற்றத்திலே!

ஆகவேதான் இன்றுமக்கு இவ்விண்ணப்பம்.
மனமார்ந்த முறையீடு :

''மீண்டும் ஈண்டு வந்திடுக மாசு போக்கி
மாண்புடையோ ராக்கிடுக

— C. S. கமலபதி

# நடத்துனர் யார்?

ஜானகி மைந்தன்

"பஸ்ஸில்"

"ஏய், கெளவி, எறங்குன்னு எறங்க வேண்டியதுதானே. இந்த 'ட்ரிப்' இத்தோட நிப்பாட்டியாச்சு மேலே போவாது. சீக்கிரமா எறங்கித் தொலே" நடத்துனர் செல்வம் 'மரியாதை'யுடன் கிழவியிடம் கூறினர் "என்ன தம்பி, வளக்கமா சந்தைக்கடை போற பஸ்ஸு தானே இது. இத்தோட நிப்பாட்டிட்டா எப்படி? நாங்க எப்படி சந்தக்கடைக்கு போறது?" "இந்தா, ஒன்னோட என்ன பெரிய ரோதனையாப் போச்சு........இதுக்கு மேலே போவாது....ஒனக்கு மட்டும் ஓட்டறதுக்கு இது ஒங்க பாட்டன் வீட்டு வண்டி இல்லே...... எறங்குன்னுக் கேளு."

நடத்துனருக்கு அவசரம். சந்தைக்கடை ட்ரிப்பைக் 'கட்' பண்ணிவிட்டால் இன்னும் 5 நிமிஷத்தில் சினிமா காட்சி முடிந்து வரும் ஜனங்களை அடைத்துக்கொண்டு திரும்பி ராயப்பேட்டைக்குப் போனுல் நல்ல வரும்படி கிடைக்கும்

சந்தைக்கடை டு ராயப்பேட்டை (வழி) மேட்டுப்பட்டி 'ரூட் பஸ்' அது. பஸ் போக வேண்டிய இடங்கள், கிளம்பவேண்டிய சேர வேண்டிய நேரங்கள் அடங்கிய காகிதம் ஓட்டுனருக்கு நேர் எதிரே, காலஞ்சென்ற பெரிய முதலாளி படத்துக்குக் கீழே 'பிரேம்' போடப் பட்டுத் தொங்கிக் கொண்டிருந்தது. ஆனுல் அந்த நேரப்படி செல்வதோ அதில் குறிப்பிட்ட எல்லா இடங்களுக்கும், எல்லா டிரிப்பும் செல்வதோ அபூர்வம் எனவே ஒரு ஒழுங்கை வலியுறுத்துவதை விட, ஒழுங்கு மீறலைக் கட்டியம் கூறவே அந்த அட்டவணை இருப்பது புலப்படும்

சந்தைக் கடை சற்று ஊரை விட்டுத் தள்ளியிருந்ததால், அநேகமாக பாதி 'டிரிப்'புகள் நடத்துனர் மனதுக் கேற்றபடி 'கேன்ஸல்' ஆகிவிடும். பணக்கார எஜமானருடன் போய்க் கொண்டிருக்கும் உயர்ந்த ஜாதி நாய் கூட, எச்சில் இலை எதிரே இருந்தால் சற்று நின்று அந்தப்பக்கம் எஜமானனை இழுப்பதைப் போல, சந்தைக்கடை போக வேண்டும் என்று நினைத்து 'டிரிப்' எடுத்தால் கூட வழியில் சினிமா, டிராமா, எக்ஸிபிஷன் போன்றவற்றிலிருந்து கூட்டம் காத்திருக்கும் என்று தோன்றினுல் 'டிரிப்பைக் கட்' பண்ணிவுட்டுத் திரும்புகிற சாமர்த்தியமும், துணிச்சலும் அந்த 'ரூட்'பஸ் நடத்துனர்களுக்கு மிகவும் உண்டு. அதை எதிர்த்துப் போராடும் துணிவோ, மனப்பக்குவமோ அந்த பஸ் பிரயாணிகளுக்கு அறவே கிடையாது துணிவுள்ள சிலருக்கும் அதற்கான நேரம் கிடையாது. எனவே 'இந்நாட்டு மன்னர்'களை மந்தைப் பிராணிகளாக்கி. இஷ்டப்பட்ட இடத்தில், ஏற்றியும் இறக்கியும், ஓடவிட்டும், நிற்கவைத்தும் 'கோலோச்'சினர் நடத்துனர்களும், ஓட்டுனர்களும்.

தப்பித்தவறி வெளியூர்ப் பிரயாணி ஒருவர், நடத்துனர் மேல் புகார் கொடுக்க, காவல் துறையினர் நடவடிக்கை எடுக்கப் போக, அதன் எதிரொலியாக பஸ்கள் சாலைகளை அடைத்துக் கொண்டு தாறுமாருக நின்று போக்குவரத்தை பாதிக்கும் அளவிற்குப் போக, கடைசியில் அந்த சம்பவம் விசுவரூபமெடுத்து மாவட்டத்தை நடத்துனரையும், மாநில அரசை நடத்துபவர்களையும் தலைவலிக்குள்ளாக்கி ஒரு வழியாக சகஜ நிலை திரும்புவதற்குள் போதும் போதும் என்ருகி விட்டது. அதன்பலன், நடத்துனர்கள் துளிர் விட்டுப் போய் பிரயாணிகளை இஷ்டப்படி நடத்துவது மிகவும் சர்வசாதாரணமாகிவிட்டது'

கிழவி பழைய காலத்தவளாயிருந்தாலும் விவரம் தெரிந்தவள்போல இருக்கிறது. "ஒரு ஆளுக்கு வண்டி ஓட்டறதுக்கு எங்க அப்பன் வண்டி இல்லேதான், ஆனா இஷ்டப்படி ஓட்டறதுக்கு இது ஒங்க அப்பன் வண்டியும் இல்லே. இன்னின்ன நேரத்துக்கு, இன்னின்ன இடத்துக்கு ஓட்டணும்னு சட்டம் இருக்கு. அதுப்படி ஓட்டறதுக்குத்தான் ஒங்களுக்கு சம்பளம் கொடுக்கறாங்க நான் எறங்க முடியாது. சந்தைக்கடைக்கு டிக்கட் கொடுத்திருக்கே. சந்தைக் கடையிலே எறக்கி விட்டுட்டு ஓம்பாட்டுக்கு மவராசனாப் போ" கிழவி சுருக்குப் பையைத் திறந்து வெற்றிலைச்சருகை எடுத்து இடது உள்ளங் கையில் வைத்து வலது கையால் தேய்க்க ஆரம்பித்தாள்

"அதான் டிக்கட்" பணம் திருப்பித்தரேன்னு சொல்லே. எறங்க வேண்டியது தானே' ஓட்டுனரும் அதட்டிப் பார்த்தார் கிழவி அசைந்து கொடுக்கவில்லை. இதற்குள் சந்தைக் கடை போவதற்காக நின்றிருந்த, பஸ் போகாது என்றவுடன் மனதிற்குள் வைது கொண்டே பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தவர்களில் சிலருக்கு தைரியம் வந்து பஸ்ஸில் ஏறினர் நடத்துனர் அவர்களை அடையாளம் கண்டு கொண்டு "சந்தைக் கடைக்குப் போவாதுய்யா' என்று கத்த, "ஏன் போவாது? இந்தம்மாவுக்கு டிக்கட் கொடுத்திருக்கேயில்லே.... அதுக்கு என்ன அருத்தம்? சந்தைக்கடை போவற 'டிரிப்' புன்னுதானே. நாங்களும் அங்கதான் போவனும்' சொல்லியவர் உட்கார்ந்து கொள்ள மற்றவர் களும் பஸ்ஸில் உட்கார்ந்து கொண்டனர். இதைக்கண்ட இன்னும் சிலரும் (சந்தைக் கடைக்கு வழியில் உள்ள ஸ்டாப்புகளில் இறங்க வேண்டியவர்களும்) வண்டியில் ஏறிக் கொண்டனர். வண்டியில் பாதிக்குமேல் பிரயாணிகள்.

கிழவி சாந்தமாக, 'ஏன் தம்பி, பாத்தியா வண்டியில் பாதிக்கு மேல ஆளு இருக்கு. இந்த 'டிரிப்'பை வேணுங்கறியே. எடு தம்பி.. இங்க நின்ன நேரத்துக்கு சந்தைக் கடை போயிட்டுத் திரும்பி வந்திருக்கலாம். வண்டியை எடுதம்பி" என்றாள். செல்வத்திற்கு அவள் சொல்வது சரி என்றேபட்டது. மேலும் சினிமாக் காட்சி முடிந்து வந்த கூட்டம் மற்ற பஸ்களில் ஏறிக்கலைந்து விட்டிருந்தது. இனிமேல் ஒன்றும் தேராது. எனவே இந்த டிக்கட்டுக்களைப் போட்டு சந்தைக் கடைக்கே போகலாமா என்று ஒரு கணம் சபலம் கூடவே, கேவலம். இந்தக் கிழவிக்கு விட்டுக் கொடுப்பதா' இந்தப் பட்டிக்காட்டு மக்களுக்குப் பணிந்து போவதா? என்ற நினைப்பு, அந்த சபலத்தை அடக்கி, ஒரு கௌரவப் பிரச்னையில் கொண்டு நிறுத்தியது. நடத்துனர், ஓட்டுனருக்கு ஏதோ சைகை செய்து விட்டு, "ரைட் போலாம்" என்றார். ஓட்டுனர் எதை யெதையோ அழுக்கி வண்டியைக் கிளப்பினார். வண்டியிலிருந்து ஏதேதோ சத்தம் கேட்டது. ஒரு குலுக்குக் குலுக்கி நின்றது. மீண்டும் ஏதேதோ சத்தங்கள். ஊஹூம் வண்டி கிளம்ப வில்லை. செல்வம் "என்ன ஆச்சய்யா.'என்றார். "பிரேக் ஸ்டக்அப்" ஆயிடுச்சுன்னு நெனக்கிறேன்' என்றவர் வண்டியைவிட்டு இறங்கி குனிந்து சக்கரங்கள் பக்கம் பார்த்தார். வண்டியை வலம் வந்தார். பிரயோசனம் இல்லே புள்ளே. வண்டி நவராது. பிரேக் நல்லா

புடிச்சுக்கிட்டது'' என்ருர். ''சே எந்த நேரத்திலே பஸ் எடுத்தமோ, யார் முகத்திலே முழிச்சமோ இன்னி பூரா ஒரே பேஜார் தான். இப்ப என்ன செய்யலாம் புள்ளே? 'டெப்போக்கு போன் பண்ணவேண்டியது தான். ஊட்டுக்குப் போற நேரத்தில் இப்படியாயுடுச்சே. இனிமே மெகானிக் வரவறைக்கும் காவல் காக்கனும் அவனுக எப்பவரானுங்களோ''

பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த பிரயாணிகளுக்கு நிலைமை புரிந்துவிட்டது. இனிமேலும் உட்கார்ந்திருக்க அவர்களுக்கென்ன பைத்தியமா? ஒவ்வொருவராகக் கீழே இறங்கி விட்டார்கள் கிழவிதான் கடைசி மெதுவாக எழுந்திருந்தாள். ''தம்பி, பரவாயில்லே, பொழச்சுக்கு வீங்க என்னமோ இந்தக் கிழவியை ஜெயிச்சுட்டேன்னு நினைச்சிருக்கே ஆனு நிச்சயமா, நீ செஞ்ச இந்தக் காரியத்துக்கு அந்த மகமாயி, சமயபுரத்தா தருந்த கூலி குடுப்பா அந்தக் காலத்திலே நமக்கு சுதந்திரம் வேணும்கறதுக்காகப் போராடி செயிலுக்கு போனவருப்பா என் ஊட்டுக்காரரு. வெள்ளைக்காரன் நம்மை ஏமாத்தனுன், அடிமைப்படுத்தனுன் நாமளே நம்மை ஆளரநெலை வந்தா, சனங்களுக்கு எல்லா சவுகரியமும் கெடைக்கும்னு நெனச்சுப் பாடுபட்டவங்கள்ளாம் அனேகமா உயிரோட இப்போ இருந்தா நம்மளை நாமே ஏமாத்தற நெலயை. அடிமையிலும் கேவலமா சனங்களை நடத்தற நிலையைக் கண்டா ரத்தக்கண்ணீர் வடிச்சிருப்பாங்க ஹூம் இந்தக் கிளவி சொல்லி என்ன ஆகப்போவுது. அந்தக்காலத்திலேயே பாரதியாரு பாடிட்டாருல்ல'நெஞ்சுபொறுக்குதில்லையே இந்த நிலைகெட்ட மாந்தரை நினைத்துவிட்டால்'னு ... நான் வரேம்பா'' கிழவி தள்ளாடித் தள்ளாடிக் கீழே இறங்கினுள். ஓட்டுனரும், நடத்துனரும் எதையோ கண்டவர்கள் போலப் பெரிதாகச் சிரித்தனர் பிறகு டீ குடிக்கக் கடைக்குச் சென்றனர் சிறிது நேரம் சென்று திரும்பிவந்து பஸ்ஸில் ஏறினர். பஸ் கிளம்பியது, ஒரு நாடகத்தை வெற்றிகரமாக நடத்திய திருப்தி, ஒரு சுத்த வீரனை வஞ்சகமாக வீழ்த்திய ஒரு பாவியின் குரூரப் புன்னகை அவர்கள் முகத்தில் நிலவின.



**கிராமத்து சாலையில்**

" என்ன இன்னும் வண்டியைக் காணோம்? டேய், டாக்ஸி எதனாச்சும் வந்தாப்பாருடா. இப்படியே இருந்தா எப்படி? சிக்கிரம் அழைச்சுகிட்டுப் போவனுமே. இந்தப் பாழாப் போன பஸ் இன்னும் வரலியே?"

'அண்ணே, பஸ் இந்தப் பக்கம் வருதோ இல்லியோ. வந்தாலும் கிழக்கே போயித் திரும்பி இல்ல வரணும். வளக்கம் போல சினிமாக் கூட்டத்தைக் கண்டுட்டுத் திரும்பிட்டாறுவளோ என்னவோ ? என்னிக்குத்தான் இதெல்லாம் நேராவப் போவுதோ''?

" மகமாயி" எம்மவளுக்கு ஒண்ணும் ஆகக் கூடாது தாயே அவநேரம் சீருமா ஆயிட்டா ஒனக்குப் படையல் வெச்சு நூறு தேட்டு நடவை சுத்திவரச் சொல்றேன் தாயே காப் பாத்து" என்று தாய் வேண்டுகிறாள். அவள் மேல் சாய்ந்தபடி ஒரு இளம் பெண் துவண்டு கிடக்கிறாள். அவள் சுவாசம் சீரின்றி விருப்பம் போல் இயங்குவதை விம்மித் தணியும் அவள் மார்பகம் காட்டிக் கொண்டிருக்கிறது. அடிக்கடி உதட்டைக் கடித்துக் கொண்டு மார்பை அழுத்தி விட்டுக் கொண்டிருக்கிறாள் 'அட நம்ப பண்ணையூரானுங்க இல்லே ! என்ன ஆச்சு ஆயா?' அந்தப் பக்கமாக வந்த ஒருவர் அந்தத் தாயை அடையாளம் கண்டு வினவுகிறார்.

"யாரு. செல்லமுத்துவா? என்னத்தைச் சொல்றது போ நானும் மவளும் நேத்துக் கிளம்பி காலையில புலியூருக்கு ஒறவுமுறை ஒத்த வங்க கல்யாணத்துக்கு வந்தோம் .... எம் மருமவன் வழியில ஒறவு அதுதான் போறதா இருந்துச்சு, பெறவு என்னையும் மவளையும் போவச் சொல்லிச்சு, அதான் திடீர்னு கௌம்பி வந்தோம். எம்மவனுக்குக் கூடத் தகவல் கொடுக் கல்ல. மதியத்துக்கு மேல லேசா நெஞ்சை வலிக்குதுன்னு சொல்லிச்சு. போகப் போக சாஸ்தி ஆயிடுச்சு. உடனே மாட்டு வண்டி கட்டிக்கிட்டுப் புறப்பட்டோம் இங்க வந்ததும் ஒரு மாட்டுக்கு வாதம் வந்து கால் இழுத்து கிடுச்சு நல்ல வேளை பஸ் வாற எடமாயிருக் கேன்னு நெனச்சுகிட்டு அரை மணியா இங்க னேயே ஒக்காந்து கிட்டுருக்கோம் பஸ்ஸூம் காணோம் ஒண்ணும் காணோம், சோதனை போல 'பிளஸ்ஸர்'கூட இந்தப்பக்கமா போவலே. ஒரே கவலையா இருக்கு மகமாயி என்ன நெனச்சிருக் காளோ" என்று புலம்பித் தீர்த்தாள் அவள்.

" அட, என்ன ஆயா நீ வந்த நேரத்துக்கு வேற மாட்டுவண்டி மாத்திகிட்டுப் போயிருந் தீன்னா இந்நேரம் ஆசுபத்திரி போயிருக்க லாமே." "பஸ் வர்ற நேரம்னுங்க. சீக்கிரமாப் போயிடலாமேன்னு இருந்துட்டம் நேரம் ஆகியும் பஸ் வராமப் போகவே. வண்டியிருக் கான்னு பாத்தா இந்தப் பாழப்போன ஊருலே ஒண்ணும் கெடக்கலே... அதான் .."

"ஹூம், கிராமத்து சனங்களுக்கு சௌகரியமா இருக்கணும்னு சர்க்கார்லே அங்கங்க பஸ் ஏற் பாடு பண்ணியிருக்காங்க. என்ன பிரயோசனம்? நடுவில இருக்கறவங்க பண்ற அநியாயத்திலே ஒண்ணுமே சரியா இருக்கமாட்டேங்குது சரி... ஆயா, பேசிகிட்டேயிருந்தா காரியம் ஆவாது...

பக்கத்தில் எனக்குத் தெரிஞ்ச பையன் ஒத்தன் இருக்கான், அவங்கிட்ட ஒரு வண்டி இருந்த ஞாபகம்... இதோ வர்றேன்... அதுக்குள்ளாற பஸ் வந்துச்சுன்னு போயிருங்க,'' என்று சொல்லி விட்டுப்புறப்பட்டார் செல்லமுத்து, கடைசியில் அந்த வண்டியில்தான் அவர்கள் ஆசுபத்திரியை அடைய முடிந்தது.

**டெப்போ'வில்**

"செல்வம், வாப்பா ஏன் லேட்? பஸ் ஏதும் தகராறு?... உன்னைத்தாம்பா தேடிட்டிருந் தோம்''

"அதெல்லாம் ஒண்ணுமில்லே விவரம் அப் பறம் சொல்றேன்... இந்தா கணக்கைப்பாரு... ஆமா ...எதுக்குத்தேடினீங்க ?''

"கணக்கு அப்பறம் பாத்துக்கலாம். ஒந் தங்கச்சிக்கு சீரியஸாம பெரியாஸ்பத்திரியிலே எமர்ஜன்ஸி வார்டுல சேத்திருக்காங்களாம். கொஞ்சநேரம் முந்திதான் தகவல் வந்திச்சு. ஒடனே. புறப்பட்டுப்போ.. இந்தா ..என் சைக்கிளை எடுத்துகிட்டுப்போ.''

செல்வத்திற்கு ஒன்றும் புரியவில்லை. தங்கச்சிக்கு ஆபத்தா? அசுரவேகத்தில் சைக்கிளை ஓட்டிக்கொண்டு ஆஸ்பத்திரிக்கு விரைந்தான்.

**ஆஸ்பத்திரியில்**

"மவனே, செல்வம் ... உந்தங்கச்சி நம்பளை விட்டுட்டுப் போயிட்டாடா. பாவிப்பய பஸ் மட்டும் நேரத்துக்கு வந்திருந்தா எம்மவ பொளச் சிருப்பாடா'' செல்வத்திற்கு விவரம் புரியவில்லை

"என்ன ஆச்சும்மா? நீங்களெங்க வந்தீங்க?'' உடன் வந்திருந்த செல்லமுத்து விவரம் கூறினார் பிறகு அந்த பஸ் மாத்திரம் வந்திருந்தா ஒந் தங்கச்சி பொழச்சிருக்கும்பா. ஒரு அரை மணி முன்னாடி வந்திருந்தா நல்லபடியா ஆயிருக் கும்னு டாக்டரய்யா சொன்னாரு அந்த ஆயி மகமாயிக்கு கண் இல்லே, இந்தமாதிரி அக்கி ரமம் பண்றவங்களைத் தண்டிக்க மாட்டேங் கறாளே. பச்சை மரத்தை வெட்டி சாச்சாப்பல இந்தப் பொண்ணை சாகடிச்சு, அந்தத் தாய் மனதை நோகடிச்சுட்டா. ஒங்கண்ணுக்குக் கண்ணா நெனச்சிருந்த ஒந்தங்கச்சியை இனி எப்பப்பா பாக்கப்போறே. ஒங்களுக்கு இப்படி செஞ்சுட்டாளே இந்த மகமாயி. அவளும் ஒரு பொம்பளைதானா? இந்த அநியாயம் அடுக்குமா?' செல்லமுத்து உணர்ச்சி வசப்பட்டு புலம்பினார்.

"மாமா. மகமாயிக்குக் கண் இருக்கு மாமா. அவ ஒண்ணும் அநியாயம் பண்ணலை. சரியான ஆளைத்தான் தண்டிச்சிருக்கா, அந்தபஸ்ஸுக்குப் பொறுப்பு நான்தான் இந்தப் பாவிக்கு ஆத்தா சரியான கூலி கொடுத்துட்டா, அந்தக் கௌவி சொன்னது சரியாப்போச்சு அவ ஜெயிச்சுட்டா நான் தோத்துட்டேன். அந்தக் கௌவி வேற யாரும் இல்லே, அந்த சமயபுரத்தாதான். மாமா, தங்கச்சீ, அம்மா'' செல்வம் மயங்கிக் கீழே விழுந்தார்.

**அதோ**

"போலாம் ரைட்ஸ். சந்தைக்கடை ஏறிக் குங்க. நிச்சயமாப் போகும் எல்லா இடமும் போகும். ஏறியாச்சா, ரைட்ஸ்'

"கௌவி, ஒக்காந்துக்க. 'டிரிப்' முளுசாப் போவும். இந்தாப்பா வண்டியை எடு. கையில சில்லரையா வெச்சுக்குங்க. போலாம். ரைட்ஸ்'

கையில் ஒரு கிழிந்து போன 'கண்டக்டர்' பையை வைத்துக்கொண்டு தன் வாழ்க்கையை 'நடத்திக்கொண்டு வருகிறார் அந்த 'மாஜி நடத் துனர்' செல்வம். ❁



## உலகத்திற்கோர் கவி

திருச்சி இரா. கண்ணபிரான்

உலகத்திற் கோர் கவி
ஒப்பற்ற உயிர் கவி
வாக்கினிலே வர கவி
வாழ்க்கையிலே புரட்சிக்கவி

தமிழ்த்தாய் ஈன்றெடுத்து
தரணியெலாம் புகழெடுத்து
தன்னலம் கருதாத
தனிக்கவி பாரதியே!

குயிலையும் கூவ விட்டான்
மயிலையும் ஆட வைத்தான்
கற்பனைக் கடலிலே
கண்டெடுத்தான் மறுமலர்ச்சி!

இயற்கையின் எழில்தனில்
எத்தனையோ இன்பங்கண்டு
பாப்பாவிற்கு பாட்டமைத்து
பாருக்கே ஞானம் பகர்ந்தான்!

பலவாகக் கண்ணனையும்
பாரதி தானழைத்து
பாஞ்சாலி சபதத்தை
பாட்டிலே தானமைத்தான்!

அன்னியனை அகற்றிடவே
அடிமைதனை நீங்கிடவே
சுதந்திரம் பெற்றிடவே
சுகம் பல வந்திடவே;

சாதிப்பெருமையைச் சாடியே
நீதி நிலைமையை நாடியே
மூடப்பழக்கம் மறைந்திடவே
முத்தமிழில் முழக்கமிட்டான்!

தன்வறுமை தானறியான்
தனிப்பிறவி யாயிருந்தும்
குருவிக்கு இரை கொடுத்தான்!
குவலயத்தின் குறை தீர்த்தான்

யானைக்கும் அழ தளிப்பான்
ஞானத்தின் கவி தொடுப்பான்
மதயானை மதிகெட்டால்
மன்னவன் மாய்ந்திட்டான்

பாரதிக்கோ நூருண்டு
பைந் தமிழுக்கோ பலவாண்டு
பாவாணரோ பலருண்டு
பாரதிக்கிணை யாருண்டு?

பாட்டுக்கோர் புலவனாய்
பாரதியும் வாழ்ந்ததாலே
பார் புகழ விழாவெடுக்கும்
பாரதமக்கள் வாழ்க! வாழ்க!!

# வனவாசத்தில் ஒருநாள்

—: M. S. மகேந்திரன் :—

"வனவாசத்தின் போது ராமனும் சீதையும் பகல் முழுவதும் இணைபிரியாமல் இருந்தும், இரவு முழுவதும் பேசிக்கொண்டு இருப்பார்களாம்"

"உத்தரராம சரிதத்தில் சீதையும், ராமனும் வனத்திலே உலாவும் கட்டம் மனதைக்கவ்வுகிறது"

"ராமன் தண்டகாரண்யத்தில் வாழ அளவற்ற ஆசை கொண்டிருந்ததாக என் பவபூதி (உத்தர ராமசரிதத்தில்) வர்ணிக்கிறான் என்பது இன்று தான் எனக்கு நன்றாக விளங்கியது. அவன் அங்கே சீதையோடு பல ஆண்டுகள் 'இன்பமாக வாழ்ந்தான்' அந்தத் தொல்பெருங் கானகத்திலே உள்ள ஒவ்வோர் இடமும் அவனுக்கு அந்த இனிய வாழ்வை நினைப்பூட்டியது"

'பழைய நினைவுகள் மாந்தருக்கு அளவற்ற மகிழ்ச்சி தருகின்றன"

மராட்டிய மதிவாணர் காண்டேசர் 'கிரௌஞ்சவதம்" என்ற தமது நூலில் கதைப் போக்கினிடையே இராமாயணம் பற்றிய தம் உள்ளுணர்வுகளை இவ்வாறு தெளித்துச் சென்றிருக்கிறார். இவற்றைப் படிக்கும்போது இராமனும் சீதையும் ஆரண்யத்தில் இனிதாக வாழ்ந்தார்கள் என்பதும் இயற்கைக் காட்சிகள் நிறைந்த கானகத்தின் அழகில் திளைத்திருந்தார்கள் என்பதும் ஆங்கே உலாவி மகிழ்ந்தார்கள் என்பதும் பகல் முழுவதும் இணைபிரியாமல் இருந்தும் இரவில் நெடுநேரம் பேசிக்கொண்டு இன்புற்றிருந்தார்களென்பதும் தெளிவாகின்றதல்லவா? அத்துடன் இராமாயணத்தில் அவைபோன்ற இனிய உணர்வுகளைப்படித்து பரவசமடைய வேண்டுமென்று மனம் துடிக்கவில்லையா?

இராமனும் சீதையும் இரவு முழுவதும் பேசிகொண்டிருந்ததாகத் தெரிவித்திருக்கிறாரே-அப்படி அவர்கள் என்ன பேசி இருப்பார்கள். பழைய நினைவுகள் இனிமையானவை அவற்றைத்தான் அவர்கள் பேசி இருக்கக்கூடும், சீதை மிதிலையில் கழித்த தன் இளமைப் பருவ நினைவுகள், அயோத்தியில் இராமனும் சீதையும் பன்னிரண்டு ஆண்டுகள் இனிமையாகக் கழித்தார்களே—அந்த நினைவுகள், வனவாசத்தில் நேர்ந்த சுவையான அனுபவங்கள் ஆகிய இவைபற்றியெல்லாம் பேசி இருக்கலாம். ஊர்மிளை தன் அன்புக் கணவர் லட்சுமணனை 14 ஆண்டுகள் பிரிந்திருந்ததை எண்ணி கவி ரவீந்திரநாத்தாகூர் கண்ணீர் வடிக்கிறார். ஒரு பெண்ணின் வாழ்க்கையில் பதினான்கு ஆண்டுகள் கணவனைப் பிரிந்திருப்ப தென்பது சாமான்யமானதா? மகத்தான பிரிவல்லவா? அந்த நீண்டநாள் பிரிவை ஊர்மிளை எப்படித்தான் சகித்து வந்தாளோ? என்றெல்லாம் எண்ணி தாகூர் வேதனைப்படுகிறார். 'காவியகர்த்தாக்கள் புறக்கணித்த பெண்டிர்" என்ற தலைப்பில் ரவீந்திரரின் கட்டுரையொன்று அவரது கட்டுரைத் தொகுப்பில் உள்ளது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்னர் வந்த கவிஞர்கள் கண்ணீர் வடிக்கிறார். என்றால் சீதையும் இராமனும் ஊர்மிளையைப்பற்றி பேசாமலா இருந்திருப்பார்கள்! சீதைக்கும் இராமனுக்கும் நடந்த உரையாடல் ஒன்றை பாரதியார் மிக அழகாக எழுதி இருக்கிறார். அந்த உரையாடலை தங்கம்மாள் பாரதி எழுதிய "பாரதியும் கவிதையும்" என்ற நூலில் "நச்சுப்பிச்சு" என்ற தலைப்பில் காணலாம். யாகத்திற்கு இடையூறு செய்யும் அரக்கர்களை வதைக்கும் வலிமை முனிவர்களுக்கே இருக்கும் போது இராமரிடம் ஹிம்சைத் தொழில் செய்யும் அந்தப் பொறுப்பை ஏன் ஒப்படைக்கவேண்டும் என்று சீதை கேட்க, உலகக்ஷேமத்திற்காகவே முனிவர்கள் தவம் செய்கிறார்களென்றும், அந்த தவவலிமையை அரக்கர்களை ஒழிப்பதற்காக செலவழிப்பது வீண் விரயமாகுமென்றும், தவ யாகத்தைக் காப்பது க்ஷத்திரிய தருமமென்றும், அதனால்தான் அந்தப் பொறுப்பை தன்னிடம்

ஒப்படைக்கிறார்களென்றும் இராமன் கூற —இந்த அடிப்படையில் அற்புதமான உரையாடலை பாரதியார் சாங்கோ பாங்கமாக எழுதியுள்ளார்.

வனவாசம் 14 ஆண்டுகள் தண்டகாரண்யத்தில் கழித்த 10 ஆண்டுகளை கம்பன் இரண்டே வரிகளில் சேர்த்து விடுகிறார். வால்மீகி மிகச்சுருக்கமாகவே சொல்லுகிறார். இராமனும் இலக்குவனும் சீதையும் முனிவர்களின் ஆசிரமங்களுக்குச் சென்று ஆங்காங்கே இரண்டொரு மாதங்கள் தங்கி இருந்து அவர்களுக்குச் சேவைகள் செய்தும், யாகங்களை அரக்கர்களின் இடையூறுகளிலிருந்து பாதுகாத்தும் முனிவர்களுடன் சத்சங்கம் அமைத்தும் வாழ்ந்து வந்தார்களென்றும் இப்படியாகவே பத்தாண்டுகள் கழிந்தன என்றும் கூறுகிறார். இராமகாதையில் விடுபட்டுப்போன பத்தாண்டுகால இடைவெளி காலத்தை ஊடுருவிப்பார்க்க வேண்டுமென்பது என் வேட்கை. இராமாயணத்தில் கிடைக்கும் செய்திகளைப் பயன்படுத்தியும் இனிய கற்பனைக் காட்சிகளைச் சேர்த்தும் பாத்திரப் படைப்புகள் சிதறுமலும் காவிய வரம்பு மீறுமலும் உன்னத உணர்வுகளைப் புகுத்தி காவிய ரஸனை நிறைந்த நூல் ஒன்று படைக்கப்படவேண்டுமென்றும் கற்றறிந்த பெரியவர்கள் முயற்சிக்கவேண்டுமென்று ஏற்கனவே என் வேட்கையைத் தெரிவித்து "சிவாஜி"யின் 41வது ஆண்டு மலரில் கட்டுரையொன்று எழுதி இருக்கிறேன். அந்தக் கட்டுரைபற்றி (தண்டகாரண்யத்தில் பத்தாண்டுகள்) கம்பன் அடிப்பொடி உயர்திரு சா. கணேசன் அவர்களிடம் அபிப்பிராயம் கோரி இருந்தேன். அவர்களும் அன்புமிகக் கொண்டு எளியேனின் கோரிக்கையை ஏற்று தமது கருத்தை, எனக்கு எழுதிய கடிதத்தின் வாயிலாக கீழ்க்கண்டபடி தெரிவித்திருந்தார்கள்.

உங்கள் தமிழ் ஆர்வத்தையும் கம்பன் மாட்டுக் கொண்டுள்ள பேரீடுபாட்டையும் உங்கள் எழுத்துக்கள் நன்குணர்த்துகின்றன. வாழ்க!

உங்கள் கட்டுரையை "தண்டகாரண்யத்தில் பத்தாண்டுகள்" என்ற எழுத்தை—நன்றாக ஊன்றி நோக்கினேன். உங்களின் வேட்கை—படைப்புக்கு வித்தாக அமையட்டும். கம்பனே அன்றி வான்மீகியோ கதை நடத்தாத அந்தக் காலக்கட்டத்தை ஏதோ ஒரு வகையில் கற்பனையான நிகழ்ச்சிகளை அமைத்து நிரப்ப முயலலாம். ஆனால் அப்படிச் செய்வது மூலக்கதைக்கு ஊறு செய்யாமல் இருக்கவேண்டும். குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள் நடவாதகாரணம்; கதையின் ஓட்டத்திற்கு உதவாத சாதாரண, அன்றாட வாழ்க்கை; போன்றவற்றால் அப் பத்து ஆண்டுகளை

"ஐந்தும் ஐந்தும் அமைதியின் ஆண்டு
மைந்தர் நீதிலர் அவண்வைகினர்"

என்று ஒரே வாக்கியத்தில் கூறி முடித்துவிட்டுக் கதை நடத்துகிறான் கம்பன்.

பெரும்போர் நடத்துவதற்கு இராமன் பத்து ஆண்டுகள் பயிற்சி மேற்கொண்டான் என்றோ அன்றி ஓய்வினால் உடம்புக்கு ஊட்டம் தேடிக் கொண்டான் என்றோ கற்பனை செய்தால் அஃது இராமன் தன் பேராற்றலுக்குக் குறையாகிவிடும், இல்லையா இதைச் செய்ய ஒரு மகாகவிதான் உரியவன் என்பது என் தாழ்மையான கருத்து. நீங்களும் நன்கு சிந்தியுங்கள்! உங்கள் மெய்யான ஆர்வத்தை மனமாரப் பாராட்டுகிறேன் என்று அவர்கள் தெரிவித்துள்ளார்கள்

மகரிஷி வ வே. சு ஐயர் அவர்கள் " A Study in Kamba Ramayana " என்னும் தமது நூலில் இராமனும் இலக்குவனும் சீதையும் வனவாச காலத்தில் எப்படியெல்லாம் வாழ்க்கை நடத்தியிருக்கவேண்டுமென்று பொதுவாகவும் அவர்களின் ஒரு நாள் வாழ்க்கை எப்படி இருந்திருக்கலாம் என்று குறிப்பாகவும் அபூர்வமாகக் கற்பனை செய்து அற்புதமான தமது ஆங்கில நடையில் மனோரம்மியமான காட்சி யொன்றை சித்தரித்துள்ளார். அதன் சாராம்சத்தைச் சொல்வதுதான் இக்கட்டுரையின் பிரதானநோக்கமாகும்.

இராமனும் இலக்குவனும் சீதையும் ஆரண்யத்தின் இனிய சூழ் நிலைகளில் திளைத்து அமைதியாக வாழ்ந்தார்கள். இலக்குவன் தன் தாயாரின் அறிவுரைகளுக்கிணங்க தன் அண்ணனையும் அண்ணியையும் மகிழ்விக்க எல்லா உபாயங்களையும் கையாண்டான். அவர்கள் மூவரும் அமைதியான கானகத்திலே நடந்து வருவார்கள்.

அவர்களின் காலடியில் மிதிபடும் சருகுகளும் காய்ந்த சுள்ளிகளும் மிதிபடும் ஓசையைத்தவிர வேறு சப்தமில்லை. அவ்வளவு அமைதி நடந்து கொண்டே வரும்போது ஒரு குறிப்பிட்ட இடத்திலே சில காலம் தங்கலாம் என்று இராமன் குறிப்பு தெரிவித்தவுடன் இலக்குவன் ஒரு இடத்தைத் தேர்ந்தெடுப்பான். அந்த இடம் தண்ணீர் வசதிக்காக ஒரு ஓடைக்கு அருகே இருக்கும்படியாகப் பார்த்துகொள்வான். புதர்களை நீக்கி அழகிய பர்ணசாலை அமைத்து அதைச்சுற்றி பூச்செடிகளை உருவாக்கி அழகு படுத்துவான் பர்ணசாலையில் தன் அண்ணனையும் அண்ணியையும் குடி அமர்த்தி ஆங்கு காவல்காத்து நிற்பான் அரக்கர்கள், கொடிய மிருகங்கள், விஷ ஜந்துக்கள் ஆகியவற்றினின்றும் அவர்களைப் பாதுகாத்து வருவான். காட்டிற்குள் சென்று காய்கனி கிழங்கு வகைகளை சேகரித்து வருவான். ஆரண்யத்தின் ஆழ்ந்த அமைதியும், மனதைக் கவ்வும் மனோரம்மிய மான மலைச்சரிவுகளும் வானளாவி நிற்கும் உயர்ந்த மரங்களும், குளிர்ந்த நிழலும், ஆங்காங்கே அடர்ந்த மரங்களினிடையே திட்டுத் திட்டாகத் தெரியும் நீலவானமும் அவர்களின் வாழ்க்கைக்கு அழகும் இனிமையும் தந்தன காலையில் நீராடி நியமநிஷ்டை களெல்லாம் முடித்த பின்னர், சகோதரர்கள் இருவரும் காட்டினுள் சென்று கனிவர்க்கங்களையும் கிழங்குகளையும் சேகரித்து வந்து சீதையின் முன்பு வைப்பார்கள். அதற்குள் அவர்களுக்குரிய உணவை சீதை தயாராக வைத்திருப்பார். அவர்கள் இருவருக்கும் அமுது பரிமாறிய பின்னர், தன் இடம் சென்று தனது உணவையும் அருந்திவிட்டு அவர்களுடன் சேர்ந்து கொள்வார். மாலை நேரத்தில் அவர்கள் உலாத்துவதற்காகச் செல்லுவார்கள். இயற்கை அன்னையின் அற்புதமான காட்சிகளைக் கண்டு களிப்புறுவர். சலசலவெனச் சப்தமிடும் ஓடையின் ஓசை ஒருபுறம், அருவியின் ஓசை ஒருபுறம் சிங்கத்தின் கர்ஜனை ஒருபுறம், குயிலின் இனிய இசை ஒருபுறம், குரங்குகள் தாவிக்குதிக்கும் வேடிக்கை ஒருபுறம் – இப்படியாகக் கணக்கற்ற இனிய காட்சிகளைக்கண்டு மனம் மகிழ்வர் சில சமயங்களில் இராமன் சீதைக்கு. வேதங்கள், புராணங்கள் ஆகியவற்றிலிருந்து காதல், வீரம் ததும்பும் இனிய சுவையான கதைகள் எடுத்துச் சொல்லுவார். சில சமயங்களில் இராமன் சீதையைப் பாடச் சொல்லுவார். அந்த அமைதியான கானகத்தில் சீதையின் இன்னிசை ஒலிபரப்பி நிற்கும் இப்படியாகவே அவர்களின் வனவாச காலம் கழிந்தது என மகரிஷி வ. வே. சு ஐயர் முடிக்கிறார்.

என் அபிலாஷைகள் இரண்டு இராமனின் அமுத காவியத்தில் விடுபட்டுள்ள பத்தாண்டுகால இடைவெளியை இனிய காட்சிகளாலும் மனோரம்மி யமான உரையாடல்களாலும் நிரப்பி காவியரஸனை ததும்பும் ஒரு நூலை பெரியவர்களின் மூலம் உருவாகச் செய்ய வேண்டுமென்பது.

இராமாயணத்தின் அழகிலும் நயத்திலும் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருந்த பேரறிஞர்களின் மனதிலே ஊடுருவி நின்ற இனிய உணர்வுகளை யெல்லாம் தொகுக்க வேண்டுமென்பது.

இவைபோன்ற எண்ணங்கள் ஏற் படுகின்றனவே-அவற்றின் நோக்கமென்ன என்று சிந்தித்தேன். காவிய மாந்தர்களுடன் நாமும் கலந்துகொண்டு அந்த அமைதியான ஆரண்யத்திலே சுற்றுலா செய்து மகிழலாமே என்ற ஒரு ரஸானுபவம்தான் என் மன நிலைக்குக் காரணமாயி ருக்கலாம் என்று கருதுகிறேன்.

# புதிய ஏற்பாடு

**திருவாழத்தான்**

ஆதாம் ஏவாள் விவகாரம் எப்படி என்பது எனக்குத் தெரியாது.

ஆனால் என் சமாசாரம் அப்படிப்பட்டது அல்ல. சிக்கலானது. மிஸ் மக்கின்லி முடியாது என்று சொல்லிவிட்டாள் 'மிஸ்டர் திருவாழத்தான் நிங்க எ வொய்ல். நான் சொல்வது சரியென்று உங்களுக்கே படும்!'' என்றாள்.

இது விஞ்ஞான விஷயம் அணுகுண்டு வேண்டாம்; ஹைட்ரஜன் குண்டு கூடாது; நைட்ரஜன் பாம் கேடு விளைவிக்கும் என்று திருப்பித் திருப்பிக் கூறியும், வல்லரசுகள் இந்த ஆயுதங்களைப் பண்ணி அடுக்கின விளைவு? நானும், மிஸ் மக்கின்லியும் மட்டுமே இந்த உலகில் இருக்கிறோம்.

அணு நாசத்திலிருந்து உலகைக் காப்பது எப்படி என்று நானும், புரொபசர் சக்கரவர்த்தியும் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த சமயம் அது. மத்திய அரசாங்கம் அந்தரங்கமாக இத்திட்டத்தை சக்கரவர்த்தியிடம் ஒப்படைத்திருந்தது. அணுக்கதிர்கள் புகாத கட்டடங்களைப் பற்றி நாங்கள் முடிவுக்கு வந்திருந்தோம். பசு மாட்டின் சாணத்தில் அணுக்கதிர்களை எதிர்க்கும் சக்தி இருக்கிறது. மனிதன் வெளியேற்றும் திடப்பொருளிலும் இந்த சக்தி இருந்தாலும், பசு மாட்டின் சாணத்துக்கு புரொபசர் முக்கியத்துவம் கொடுத்தார்.

கரப்பான் பூச்சிகளை அணுக்கதிர்கள் பாதிப்பதில்லை என்பதிலிருந்து நாங்கள் இந்த முடிவுக்கு வந்திருந்தோம்.

பசுஞ்சாணத்திலிருந்து அணுக்கதிர்களை எதிர்க்கும் பொருளைப் பிரித்து, ஃபைபர் கண்ணாடிக் குழம்புடன் சேர்த்து, கட்டடங்களுக்கான புதுவகைப் பலகைகளை உற்பத்தி செய்தோம். தேர்ந்த வினைஞர்களை நல்ல சம்பளத்தில் வேலைக்கு அமர்த்தி, பொதுமக்களுக்குத் தெரியாதவாறு, மக்கள் நடமாட்டம் அற்ற ஒரு நிலப் பகுதியைத் தேர்ந்து எடுத்து சின்ன காலனி ஒன்றை உருவாக்கினோம். இரண்டு ஆண்டுகளுக்கு எந்த ஊழியருக்கும் லீவு கிடையாது; யாரும் எந்த ஊருக்கும் போகக்கூடாது; எவரையும் இங்கு அழைக்கக்கூடாது; தபால் அலுவலகம், டெலிபோன், தந்தி, பத்திரிகைகள் எதுவும் கூடாது என்பதாக ஒரு கட்டுப்பாடுடன் எங்கள் திட்டம் துவங்கியது. மிக நம்பிக்கையுள்ள நான்கு ஊழியர்கள் மட்டும் வானை எடுத்துச்சென்று, அவ்வப்போது காலனி மக்களுக்குத் தேவையான பலசரக்குச் சாமான்களை வெளியூர்களிலிருந்து வாங்கி வருவார்கள். எங்களுக்கும் வெளி உலகத்துக்கும் உள்ள ஒரே தொடர்பு ரேடியோதான். அதன் மூலமாகத்தான் செய்திகளை அறிவோம்.

திட்டப்படி அணுக்கதிர் எதிர்ப்புக் கட்டடம் உருவாகி வந்தது. கம்ப்யூட்டர்கள் பொருத்தப்பட்டன. மின்சாரம் தடைப்பட்டாலும், சில நாட்களுக்குப் பயன் தரும் வகையில் மின்சார பாட்டரிகள் அடுக்கப்பட்டன. விளக்குகளுக்காக இல்லாவிட்டாலும், கம்ப்யூட்டர்கள் இயங்க மின்சாரம் தேவை அல்லவா?

இருபத்து நான்காம் மாடியில் நான் கம்ப்யூட்டரைக் குடைந்து கொண்டிருக்கும் போது அது நேர்ந்தது. பெரியதொரு ஓசை ஜன்னலுக்கு வெளியே சிறப்பான பேரொளி. நின்று எட்டிப் பார்த்தபொழுது, கடல் பொங்கிக் கொதித்து எழுந்து வந்தது. பிறகு எனக்கு நினைவில்லை.

எழுந்தபோது, அருகே மிஸ் மக்கின்லி நின்றிருந்தாள். பார்வையின் கலக்கம் வடிந்து, தெளிவு ஏற்பட்டபோது, ஸ்கர்ட்டும், முகத்தில் கவலையுமாக அவள் எதிரே நிற்பது முதலில் நிழலாக, பிறகு கனவாகத் தெரிந்தது. இரண்டு நிமிஷத்துக்கு அப்புறம்தான், என் மூளை தன்னை சுதாரித்துக்கொண்ட பிறகு என் முன்னால் ஸ்தூலமாக ஒரு பெண் நிற்கிறாள் எனத் தெரிந்து கொண்டேன்.

"வொய்" வாட் ஹாப்பண்ட் டுமீ? என்று கேட்டு எழ முயற்சி செய்தேன்.

"மெதுவாக, மிக மெதுவாக, மிஸ்டர் திருவாழத்தான்!" என்று கூறி நான் நிமிர்ந்து உட்கார உதவினாள் அப்பெண்.

"நான் மிஸ் மக்கின்லி. கனடாவிலிருந்து வந்திருக்கிறேன். இந்த உலகில் மிஞ்சிய உயிர்கள் நாம் இருவரும்தான்!" என்றாள்.

"ஏன், என்ன ஆயிற்று" நான் கேட்டேன் எழுந்தபடி.

"ஒரு வல்லரசு செய்து அடுக்கிய நியூட்ரான் குண்டு வெடித்ததன் விளைவால், அத்தனை நியூட்ரான் குண்டுகளும் வெடிக்க, உலகில் உயிர்கள் அனைத்தும் அழிந்துவிட்டன!"

"அப்படியா? நீ எப்படித் தப்பித்தாய்?"

"உன் மாதிரித்தான். நாங்களும் நியூட்ரான் போரிலிருந்து தப்புவதற்கான திட்டத்தை உருவாக்கிக் கொண்டிருந்தோம். அசந்தர்ப்பமாக, என்னைத் தவிர என்னைச் சேர்ந்த சிப்பந்திகள் அனைவரும், அணுக்கதிர் எதிர்ப்புக்கான கட்டத்திலிருந்து வெளியே இருந்ததால், மரணமடைய நேரிட்டு விட்டது நான் தப்பினேன்!"

"என்னை எப்படிக் கண்டுபிடித்தாய்?"

"கம்ப்யூட்டரை இயக்கினேன். உன் கம்ப்யூட்டர் பதில் அளித்தது. - இந்தியா, - தமிழ்நாடு அக்கரைப்பாக்கம் - அங்கிருந்து வடக்காக நூற்று இருபது கிலோ மீட்டர் என்று சொல்லியது கம்ப்யூட்டர். விமானத்தை எடுத்துக்கொண்டு, பறந்து வந்தேன்"

"நான் உயிரோடு இருப்பது எப்படித் தெரிந்தது?"

முதலில் தெரியாதுதான். யாராவது உயிரோடு இருக்கமாட்டார்களா என்ற நப்பாசைதான் வந்தேன். படிகளில் ஏறினேன். இதோ பார் இந்தக் கருவியை. இது வழியில் கிடந்த உருவங்களை நெருங்கிய போதெல்லாம் இயங்காமல் இருந்தது. இங்கு உன்னை நெருங்கியதும், இதன் முள் துடித்தது நீ மயக்கமாக இருக்கிறாய், உன்னுள் உயிர் இருக்கிறது என்று புரிந்து கொண்டு காத்திருந்தேன்."

"எத்தனை நாட்களாக?"

"காலண்டரைப் பார். இன்னிக்கு என்ன தேதி தெரியுமா?"

"என்ன தேதி"

"பதினேழு"

"அப்போ...... ?" யோசித்தேன்.

மூன்று நாட்களாக மயக்கத்தில் இருக்கிறாய்!" என்றாள் மிஸ். மக்கின்லி.

"அதான் பசிக்கிறது!"

"நீ தான் சமையல் செய்து கொள்ள வேண்டும்!"

"ஏன், நீ செய்ய மாட்டாயா?"

"உன் பருப்பு சாம்பாரும், கத்தரிக்காய் பொரியலும் செய்ய எனக்குத் தெரியாது!;'

"காஃபி!"

"பிளாக் காப்பிதான்!"

"ஏன்?"

"பால் கிடையாது. பசுக்கள் எல்லாம் இறந்துவிட்டன"

"உலகத்திலே வேறு யாருமே இல்லையா"

"இல்லை நீயும் நானும் தான்!"

"வா வெளியே சென்று பார்க்கலாம்"

"கூடாது. அணுக்கதிர்களின் கொடுமை குறைந்து விட்டாலும், மரித்த உடல்கள் நாற்கள்

நத்தை விசத்தொடங்கி இருக்கின்றன. வெயில் காய்கிறது. அழுகிய உடல்கள் வாட ஒரு மாதம் ஆகும். முட்டைகளிலுள்ள குஞ்சுகள் வெளிப்பட்டு' பறக்கத்தொடங்கி, பறவைகள் இந்த உடல்களை இரையாகக் கொண்டால், துர்க்கந்தம் குறையும் நாம் வெளியே செல்லலாம்."

" அதுவரை ? "

" இங்கேதான் ! "

" நாம் இருவர்தான் மனிதர்களா? "
' ஆம். ! "

நாம் உற்பத்தி தொடங்க வேண்டுமா? ',

" அது பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறேன் ! "

" மிஸ் .. உம் .. உன் பெயர் என்ன."

" மக்கின்லி. "

" மிஸ். மக்கின்லி, உன் முகம் நிலவு போல இருக்கிறது ! "

" அப்படியா ? '

" உன் உதடுகள் கோவைப் பழங்கள் ! அப்படி என்றால் எனக்குத் தெரியாது. பழுத்த தக்காளிப்பழங்கள்! அதாவது டொமேடோஸ்! "

" புரிகிறது ! "

" உன் கண்கள் கடல்கள்!விழிகள் மீன்கள்"

" சரிதான்! "

" நான் உன்னைக் காதலிக்கிறேன். "

" அந்த விஷயத்துக்குத் தான் வருகிறாய் என்று தெரிந்து கொண்டேன்! "

" கண்ணே, நாம் கல்யாணம் செய்து கொள்ளலாமா? "

" செய்துகொண்டு? "

" நாம் தான் மீண்டும் இந்த உலகை மீண்டும் உயிர்ப்பிகக வேண்டும்! "

" அது முடியாது எனத்தோன்றுகிறது" என்றாள் மிஸ். மக்கின்லி.

" என்? உன் பைபிளில் ஆதாம், ஏவாள் பற்றிப் படித்திருப்பாயே? "

" அது ஒரு காலம். பிரிமிடிவ் "

" அப்படின்னா? "

" அவர்கள் உறவாடி, ஏவாள் கருத்தரித்து மக்களை உற்பத்தி செய்திருக்கலாம். அந்த சகோதர சகோதரிகள் உறவுகொண்டு மேலும்உற்பத்தியைப் பெருக்கி இருக்கலாம். நாம் நாகரிகம் அடைந்தவர்கள். நமக்குப் பிறக்கும் குழந்தைகள் வயது வந்தபின் தங்களுக்குள் உறவு கொள்ள முடியாது! "

" நம்மோடு உயிர் இனம் அழியப் போகிறதா? '

" ஆம் " என்றாள் மிஸ் மக்கன்லி.

புத்தக விமர்சனம்

# "இலக்கிய ஜோதி"

ஆசிரியர் : பேராசிரியர் மது. ச. விமலானந்தம்

மோகனப் பதிப்பகம், சென்னை-4 விலை: ரூ. 28-00

"பெண்மை வாழ்க" எனக் கூத்திடப் பணித்தனன் பாரதி. இவ்வாணை, பௌதிகமாக செயல்படுத்தப்படவேண்டிய ஒன்று அன்று. சைதன்னிய நர்த்தனமே மகாகவியின் குறிப்பும், குறிக்கோளுமாம். இச்சாதனையை மகாகவியின் திருவுள்ளப் பாங்கின் படியே நிகழ்த்தியிருக்கும் நண்பா மாசில்மகிழ்நனுக்கு நம் தமிழகத்தின் சார்பில் பாராட்டுகள். தோன்றும் பொழுதே சுகந்தத்துடன் தோன்றுவது திருத்துழாய். அத்திருத்துழாய் போல்வாரும் உளர், என்பதைக் கலியுகத்தில் மெய்ப்படுத்திக் காட்டியவர் சகோதரி ஹ. கி. வாலம் அவர்கள். கவிதா ரத்நமாய், அருள் அரசியாய், அன்புப் பிழம்பாய் ஒளிர்ந்து பேரொளியில் கலந்து விட்ட மாமேதை அவர். ஆறும் வகுப்பைக்கூட கடக்காத அவர் ஒரு பிறவி-ஞானியார். அவர் படைத்திருக்கும் அணிமணிகள் அனந்தம்.

தமிழ்நாட்டில் ஹாலாஸ்யம் அவர்களை அறியாதார், அறியாதாரே. அவ்வருளாளர் தம் திருமகளாய்ப் பிறக்கும் பேறு பெற்ற வாலம் அம்மையார் ஒரு தீர்க்க சுமங்கலி, மங்களப் பெண்மணி தமிழின் கண்மணி இந்திய மொழிகளைத் தந்தையிடத்தும், ஆங்கிலத்தை கணவரிடத்தும் பயின்று துறைபோகிய இவ்வம்மையாரின் சீரிய வாழ்க்கையை பல கோணங்களில் பார்த்து, கணித்து, மகிழ்ந்து, வியந்து, உணர்வோடு பிசைந்து படைக்கப்பட்ட நல்லமுதே "இலக்கிய ஜோதி".

ஏறத்தாழ 550 பக்கங்கள் கொண்ட இந்நூல் ஒவ்வொரு நூல்நிலையத்தையும் அலங்கரித்தல் வேண்டும். நூல் ஆசிரியரின் நடை தனி சிறப்பு உடைத்து. அம்மையாரைப்பற்றி அவர் கூறுவது அவருக்கேகூட பொருந்தும். "சந்தமார் நடை சானத் தமிழ், பெருமிதப் பாங்கு, பிசிறில்லாத போக்கு, பீடு நிறை பாணி; காம்பீர்யமாய் கங்காப் பிரவாகம்போல், காவிரி போல் பாய்ந்து வரும் பேச்சு, கங்கையைப் போல் காவிரி போல் ஊறும் கருத்துகள்."

நூலைப் படித்து முடித்தவுடன், **So father'd and so husbanded** என்ற ஷேக்ஸ்பியர் மணிவாசகம், வாசகன் மனத்தில் அழுத்தமாகப் பதிகின்றது.

பெண்ணொளி வாழ்த்திடுவார் செல்வத்தில் பெருகுவர் என்று ஆணை தந்தள்ளான் அமரன் பாரதி. இந்நூலாசிரியர் சீர்த்தி பெறுவதில் ஐயமும் உண்டோ!

(டி. என். ஆர்)

# வீர விளக்கு வ.வே.சு.

கவிஞர் சக்திதாசன், பெண்ணாடம்

வாணி அருளால் வையகத்தின்
வாழ்வு மலர, வழிகாட்ட
ஆணிப் பொன்னாய் அவதரித்த
அண்ணல் அனைவர் பதம் போற்றி!

வாணிகம் புரிந்திடும் நோக்கமொடு
வந்த வெள்ளையர், நம்மவரை
ஏணிப் படியினை மிதிப்பதுபோல்
எண்ணிய வகையில் இடரளித்தார்:

வந்தே மாதரம் என்றுரைக்கும்
வாய்களில் குருதி வழியவைத்தார்:
வந்தனைக் குரிய வல்லவரை
வாடிட செக்கினை இழுக்கவைத்தார்:

இவ்வித ஆட்சியை அகற்றிடவே,
இருளி லிருந்து ஒளிபெறவே,
திவ்விய பாரத விடுதலைக்குத்
தியாகிகள் போர்களைத் தொடுத்தார்கள்;

எங்கும் சுதந்திரக் குரலெழுப்பி,
எதிரிகள் துணுக்குற வைத்தவருள்
எங்கள் வ. வே சு. ஐயரவர்!
எழுச்சி உள்ளம் கொண்டவராம்;

சீரார் கருருக் கடுத்துள்ள
சின்னா (ள) ப் பட்டி எனுமூரில்
பேரார் வேங்க டேசர்க்கும்
பீடுறு காமா க்ஷியன்னையர்க்கும்

ஆயி ரத்து எண்ணூற்று
எண்பத் தொன்று ஏப்ரலிலே
தாய்,சிவ சக்தி தனயனுமாய்
சரித்திரம் படைத்திட, வழிகாட்ட

வீர விளக்காய் தோன்றியவர்:
வித்தகர்: சாத்திர வீரியர் காண்:
சூரனை யொழித்து, சுகம் தரவே
சுப்பிர மணியனாய் அவதரித்தார்;

சிரகிரி திருச்சி மாநகரைச்
சேர்ந்ததோர்ப் பகுதி யாய்விளங்கும்
வரக னேரி தனிலிருந்து
வாய்த்த கல்வித் திறனடைந்தார்:

பனிரெண் டாவது அகவையிலே
பாக்ய லட்சுமி எனும் கொடியை
நனிமகிழ் வுடனே பற்றியபின்
நன்னகர் சென்னையம் பதியடைந்து

சட்டக் கல்வி பெற்றவுடன்
சற்றே காலம் திருச்சியிலே
திட்ட முடனே தன்தொழிலைத்
திறமாய் நடத்தி வரக் கண்ட,

மருகன் இரங்கூன் பசுபதியும்
மனமகிழ் வுடனே ஐயரைத்தான்
திருசேர் நகராம் லண்டனுக்குச்
சென்றுமேற் பயில வழிவகுத்தார்:

லண்டன் சென்ற சின்னாளில்,
லாலா ஹரிதயாள், சந்த்ரபால்
அண்டம் நடுங்கும் ச்யாம்ஜீ போல்
அனைத்து தீவிர வாதிகளின்

நெருக்கம் கிட்டிய காரணத்தால்
நித்தமும் தேச நலனுக்காய்
உருக்கம் கொள்ளத் துவங்கிட்டார்:
உத்தமர் காந்தியைத் தெரிசித்தார்:

காந்தி தெரிசனம் கிடைத்ததன் பின்
கற்ற அரசியல் அனுபவத்தால்
சாந்தி இல்லை ஐயருக்கு
சழக்கரை அடக்கிடப் புறப்பட்டார்:

வங்கப் பிரிவினை யின் போழ்து
வைலி என்னும் துரை தனத்தான்
பங்கம் கொண்ட காரணத்தால்
பழிவாங் கிடநம் வ.வே.சு.

திங்க ராவைத் தேர்ந்தெடுத்து
திண்மை, வீரக் கனல்மூட்டி
அங்கம் துடித்து, அவன்மாய
அற்புதம் செய்ததை வியப்போம் நாம்!

திங்க ராவின் மறைவின் பின்
தீவிர வாதி சாவர்க்கார்
அங்கி லேயரால் கைதாகி
அல்லல் படுமுன், ஐயரிடம்

தப்பிச் செல்ல வழி வகுத்தார்:
தர்ம சீலன் அவ்வழியே
ஒப்பும் மாற்று வேடத்தால்
ஒற்றர் பலரை ஏமாற்றி,

பிரஞ்சு நாட்டில் புகுந்தாலும்
பிரிட்டிஷ் கார ஒற்றர்களின்
கரங்களில் சிக்கித் தவிக்காமல்
காமா, ராணா என்போரின்

துணையால் ஐயர் புதுவைக்குத்
துணிவாய்ச் சேர்ந்த பிற்பாடு
இணையிலா கவிஞன் இந்தியரின்
இதயக் கவிஞன் பாரதியைக்

கண்டு மகிழ்ந்து அவருடனே
காலந் தோறும் நாட்டிற்கேத்
தொண்டு ஆற்றத் துடித்திட்டார்:
துடிப்பு மிக்க ஐயரவர்:

கப்ப லோட்டிய தமிழனையும்,
கண்டோர் மலைக்கும் துணிவுடையான்
சுப்பிர மணிய சிவாவினையும்
சூழ்ச்சி வலையில் சிக்கவைத்து,

நெல்லைமா வட்டம் வாழ்பவர்க்குத்
தொல்லைகள் தந்த ஆஷ்துரையை
கொல்லத் துணிய வாஞ்சியனைக்
குறிப்பா யறிந்துத் தேர்ந்தெடுத்த

எங்க ளேறு வ. வே. சு
இதயம் கண்டு வியக்கின்றோம்!
சிங்க மொவ்வும் அவர் செய்கைத்
திறனும் கண்டு மலைக்கின்றோம்!

முதலாம் உலகப் போர் முடிவில்
முதல்தர அரசியல் வாதிகளை
சுதந்திர மாகவே தந்நாடு
சென்று வாழ்ந்திட வகையளித்த

பிரிட்டிஷ் காரர் அனுமதியால்
புதுவையை விட்டு வெளியேறி
பெரியார் வ.வே சு ஐயரவர்
பிறந்த பூமியை வந்தடைந்தார்:

சென்னையம் பதிக்கு வந்தவுடன்
''தேச பக்தன்'' எனுமிதழில்
தன்னை முழுதும் பொறுப் பாக்கித்
தாய்த்திரு நாட்டுப் பற்றுரைத்தார்:

ஐய ரவரைச் சிக்கவைத்து
அல்லல் படுத்தும் நோக்கமொடு
தீயன சுமத்தி பிரிட்டிஷார்
சிறையி லிட்டுச் சிதைத்தார்கள் :

சிறையி லிருக்கும் போழ்தினிலே
சிந்தனை செய்து ஆங்கிலத்தில்
மறைதிருக் குறளும் கம்பன் கவி
மாசில் முறையாய் மொழிபெயர்த்து

உலகம் பயனுற வழங்கியவர்
உலகம் போற்றிட உயர்ந்திட்டார்:
பலரும் இவரை 'ரிஷி ஐயர்'
பண்பு மிக்கவ ரெனப் புகழ்ந்தார்.

சேரன் மாதே விப்பதியில்
தேசியம் ஆன்மிகம் நெறிபரவ,
பாரத் ராஜ குருகுலத்தைப்
பாரும் போற்றிட நடத்திவந்தார்:

பாப நாச அருவியினைப்
பார்க்க சிறாருடன் செல்லுகையில்
ஆபத் தான ஓரிடத்தில்
அருமை மகளாம் சுபத்திரையும்

இடறி வீழ்ந்து அருவியிலே
இழுத்துச் செல்லும் நிலைகண்டு
உடனே ஐயர் குதித்துவிட்டார்:
உயிர்கள் இரண்டும் போயினதே!

அந்தோ! அந்தோ! என்செய்வோம்!
அருமைத் தலைவனை இழந்தோமே!
இந்தப் புவியின் இருளகற்றும்
இன்சுடர் மதியை இழந்தோமே!

அச்சம் தவிர்த்த அண்ணலை நாம்
அருவி பருகிட அளித்தோமே!
விச்சை நல்கிய மகரிஷியை,
வீர விளக்கை இழந்தோமே!

தாயை இழந்த சேய் போலத்
தடுமாற் றத்தை யடைந்தாலும்
தூய ஐயர் நமக்களித்த
துணிவே நமக்குத் துணையாகும்:

நாற்பத் திநான்கு ஆண்டுகளே
நானில மீதில் வாழ்ந்திட்ட
ஆற்றல் தொண்டனை அற்புதனை
ஆத்ம சுத்தனை மறவோமே!

வந்தே மாதரம் என்றிடுவோம்:
வாழிய பாரதம் எனப் பணிவோம்!
நந்தம் தலைவன் வ.வே சு.
நல்லோன் புகழைப் பரப்பிடுவோம் !

## ''சிவாஜி'' சந்தா விபரம்

| | | |
|---|---|---|
| காப்பாளர் சந்தா | .... | ரூ. 500 — 00 |
| ஆயுள் சந்தா | .... | ரூ. 250 — 00 |
| வெளிநாடு | .... | ரூ. 25 — 00 |
| ஆண்டு சந்தா (மலர் உள்பட) | | |
| உள்நாடு | .... | ரூ. 15 — 00 |

— விபரங்களுக்கு —

நிர்வாகி,

'சிவாஜி' மாத இதழ்

த. பெ. எண். 307

2 B, கோட்டை ஸ்டேஷன் ரோடு,

திருச்சிராப்பள்ளி-620 002.





## அமுத வாக்கு

வைய முழுதும் படைத்தளிக் கின்ற
மஹாசக்தி தன்புகழ் வாழ்த்துகின்றோம்
செய்யும் வினைக ளனைத்திலுமே வெற்றி
சேர்ந்திட நல்லருள் செய்க வென்றே

— பாரதி